# "RIGHT WILL CONQUER. TRUTH WILL MAKE US FREE."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

" HITCH YOUR WAGON TO A STAR," " TO THINE OWN SELF BE TRUE,




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.] [God is Love : Knowledge is Power : *Aum*

"New Series" ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** "Approved"

புத்தகம். 23.] ராக்ஷஸ௵ புரட்டாசி௴, 1915௵ செப்டெம்பர்௴ [சஞ்சிகை 6.


# "RIGHT WILL CONQUER. TRUTH WILL MAKE US FREE."

[*"Look beyond the trenches and beyond the graves of gallant youth for the explanation of that which baffles human understanding and crushes the hearts. Right will conquer. Truth will make us free."—Sir William Crookes' Message.*]

### "IN MEMORIAM."

"One more among thousands gone for the sake of humanity .....So he played the game as well as he could and we have nothing left but memories. Have you realised that by this time 5 million men have died in this war and probably 50 million people are grieving for them."—*The Tribute of the 'hearts crushed' to the spirit of the departed Brave.*

### IN MEMORIAM.

**In loving and ever present memory of him***—the eldest son of Mr. and Mrs. H.O.D. Harding —**who went to war and died in the field of battle playing his part well and thinking of his duty alone to the last. Seriously wounded 16th June 1915. Died 18th June 1915.**

*Requiescat in pace.*

*—The Children's Memorial to the Brave.*

### * TO MY BROTHER-IN-ARMS IN THE EVER-LASTING BATTLE OF LIFE.

(*With Apologies to Lord Alfred Tennyson.*)

O My brother-in-arms in the e'erlasting Battle of Life !
Thou hast played thy part so well in the strife
And taken the shortest Road that leadeth to 'REST'!
Leaving the laggard 'I' to bear the burd'n of Life and all'ts contest.

* * * *

" I know that this was Life,—the track
Whereon with equal feet we fared ;
And then, as now, the day prepared
The daily burden for the back."

" But this it was that made me move
As light as carrier-birds in air ;
I loved the weight I had to bear,
Because it needed help of Love ;"

* * * *

" When in the down I sink my head,
Sleep, Death's twin-brother, times my breath ;
Sleep, Death's twin-brother, knows not Death
Nor can I dream of thee as dead."

## ODE TO MEMORY.

"WE HAVE NOTHING LEFT BUT MEMORIES."

I

Thou who stealest fire,
From the fountains of the past,
To glorify the present ; oh, haste,
Visit my low desire !
Strengthen me, enlighten me !
I faint in this obscurity,
Thou dewy dawn of memory.

II

Come not as thou camest of late,
Flinging the gloom of yesternight
On the white day ; but robed in softened light
Of orient state.

* * * *

III

* * * *

In Sweet dreams softer than unbroken rest
Thou leddest by the hand thine infant Hope.
The eddying of her garments caught from thee
The light of thy great presence; and the cope
Of the-half attained futurity,
Though deep not fathomless,
Was cloven with the million stars which tremble
O'er the deep mind of dauntless infancy.
Small thought was there of life's distress
For sure she deemed no mist of earth could dull
Those spirit-thrilling eyes so keen and beautiful:
Sure she was nigher to heaven's spheres,
Listening to the lordly music flowing from
The illimitable years.

* * * *

IV

Come forth, I charge thee, arise,
Thou of the many tongues, the myriad eyes !

* * * *

V

Large dowries doth the raptured eye
To the young spirit present
When first she is wed ;
And like a bride of old
In triumph led,
With music and sweet showers
Of festal flowers,
Unto the dwelling she must sway.
Well hast thou done great Artist Memory,
In setting round thy first experiment
With royal frame-work of wrought-gold ;
Needs must thou dearly love thy first essay
And foremost in thy various gallery
Place it, where sweetest sunlight falls,
Upon the storied walls ;
For the discovery
And newness of thine art so pleased thee,
That all which thou hast drawn of fairest
Or boldest since, but lightly weighs
With thee unto the love thou bearest
The first-born of thy genius. Artist-like
Ever retiring thou dost gaze
On the prime labour of thine early days ;
No matter what the sketch might be ;

* * * *

My friend, with you to live alone,
Were how much better than to own
A crown, a sceptre, and a throne !
O strengthen me, enlighten me !
I faint in this obscurity,
Thou dewy dawn of memory."

## "A VETERAN OF SCIENCE" ON THE PRESENT WAR.

SIR WILLIAM CROOKES AT 85.

Sir William Crookes, the distinguished scientist, who is a member of the Order of Merit and President of the Royal Society, is 85 years of age, and still has great mental vigour, as Mr. Harold Begbie shows in an interview in the "Chronicle."

"To be alive at 85 is a fine thing in itself but to be very vigorously and intellectualy, alive at this age, and by the same token to be working for the nation in its hour of trial with every faculty alert, only wishing that there was more work to do, this is a thing so fine and heartening that we may all cry 'Hats, off!' to Sir William Crookes, and in this salutation feel ourselves braced up to do still more in helping our country and the cause of the Allies," says Mr. Begbie.

"It would be dreadful if one had to record that this veteran of science was a noisy optimist, a bustling worker, a patriot boasting of his age, and cackling mere contempt of the enemy. Sir William is the reverse of this. He has always been one of the most modest as he has certainly been one of the most courageous inquirers of our day ; and the only effect of age noticeable in his mind is a deepening of this modesty, which shows itself in a more deliberate and careful manner of expressing an opinion and certain suavity on the soul making for graciousness and consideration.

"He told me that he is concious in himself of no change of faculty during the last thirty or forty years. He can work as hard, he can see as well, he can hear as well, he can bear fatigue as well, and, what is far more to the point, he is just as interested in life now as he was then. Indeed, he is inclined to doubt whether he is aware in himself of any physical inhibition for more years than this. "I feel," he said, "very much as I felt at thirty-five years of age."

புஸ்தகம்-23.] [சஞ்சிகை-6

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

ராக்ஷஸ௵ ஆவணி௴



# விவேக சிந்தாமணி

September-October. 1915.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## A VETERAN OF SCIENCE ON THE PRESENT WAR.

SIR WILLIAM CROOKES ON THE PRESENT WAR

"The deeper scientific investigation goes, the more impossible is it to account for life on mechanical grounds. Although for nearly thirty years now Sir William has not continued his psychical investigations, he is convinced that there is survival of the identity after death. This war does not shake his faith in the providence of God. He sees that the utter immorality of German war methods is a serious blow for the prestige of organised religion, since the Germans are undoubtedly a religious people. Religion may possibly suffer on this account. Men will be more incredulous than ever concerning the value of ecclesisticism. But faith in the spiritual reality underlying an interpenetrating all physical appearance is not likely to suffer from the horrors of this war. Physical science can neither explain nor satisfy. Physical science works in a field which excludes the spirit of man, and the longings of the spirit, will always be directed away from that sphere. Clericalism may possibly go but religion is eternal, for religion is Man and his Destiny.

"Moreover, it is impossible to say at present whether this war is a blessing or a curse It looks to some men like a titanic struggle between the forces of Good and Evil, a struggle which may possibly be only a reflection on our particular star of some cosmic struggle which is now shaping the destinies of eternity. In the universe are Good and Evil, and between Good and Evil there must always be contention, contention blazing up at certain moments into the conflagration of war. Fire spreads. It may even reach from star to star.

"RIGHT WILL CONQUER. TRUTH WILL MAKE US FREE."

"This vetern of science bids us in quiet and modest tones entertain no doubt of the conflict's issue, bids us work for victory, sure that victory is on the side of righteousness, and to look beyond the trenches and beyond the graves of gallant youth for the explanation of that which baffles human understanding and crushes the hearts. Right will conquer. Truth will make us free."

---

## இப்போது நடக்கும் யுத்தத்தைப்பற்றி ஒரு வித்யாவிற்பன்னர் அபிப்பிராயம்.

SIR WILLIAM CROOKES AT 85.

ஸர் உவில்லியம் க்ருக்ஸ் என்பவர் ஆங்கிலேய சாஸ்திர விற்பன்னர்களில் பிரதமஸ்தானம் பெற்றவர். இவர் மனோதத்துவ சாஸ்திர விசாரணை செய்வதிலும் பூததத்துவ சாஸ்திர விசாரணை செய்வதிலும் துணிந்திறங்கித் தீர விசாரிக்கும் சக்தி வாய்ந்தவர். பல வருஷங்களுக்கு முன் இவர் மனோதத்துவ சாஸ்திர விசாரணை சங்கத்தலைவராயிருந்த பொழுது அத்துறையில் துணிந்திறங்கி விசாரணை செய்தவராய் ஆத்மதத்துவம் என்று சொல்லும் அறிவு மயமான சித்சக்தி பாவனாதீதமானது (Meta-psychic) என்று தீர்மானித்துப் பறை

யறைந்துள்ளார். பூததத்துவ சாஸ்திர விசாரணை செய்வதில் தீரர் என்று பேரெடுத்தவர். "Radio-metre" என்று சொல்லும் "தேஜோமானம்" என்கிற ஒளியளக்கும் கருவியைக் கண்டுபிடித்து நிர்மித்தவர் இவரே. இந்தக் கருவியினுல் கட்புலனுக்குப் பிரத்தியக்ஷமாகாத ஒளியையும் குறிப்பிட்டு அளக்கலாம். இவருக்குப் இப்பொழுது வயது 85-ஆய்விட்டது. ஆனுலும் 35-வயதில் அவர் எப்படியிருந்தாரோ அப்படியே இப்பொழுதும் கருவி கரணங்களின் சக்திகுறையாமல் மனோசக்தி முதிர்ந்து வேலை செய்வதில் கர்மத்தின் சுவையறிந்துழைக்கும் சுபாவம் வாய்ந்தவராகவிருக்கிருர்.

பிரகிருதிவித்தையில் (Science of Nature) உண்மை விசாரம் செய்து தேர்ந்த வித்வான்கள் பிரகிருதியம்சமாகிய தேஹ மனோதத்துவங்களின் குணமறிந்தவர்களாக விருப்பார்களாதலால், அவர்களுக்குக்கருவிகரணங்கள்சொன்னபடிகேட்கும் என்பது யோகிகளின் அனுபவசித்தாந்தம். யோகியென்ருல்என்னவோஎன்று மலைத்து விடாதிர்கள். "அலையும் மனத்தை அடக்கும் அவனே யோகி, அத்தீரன், பரன்" என்று மூத்தோர் சொல்வார்த்தை யிருப்பதால், குரங்கைப்போல் கிளைவிட்டுக் கிளைதாவியோடிக்கொண்டு விஷயங்களில் ஆழ்ந்து அலைந்த வண்ணமாயிருக்கும் மனத்தை எவனொருவன் விவேகபுத்தியால் அடக்கி ஆண்டு நன்ருகப்பழக்கிய குதிரையைப்போல் அதை அவன் இஷ்டம்போல் நடக்கப்பழக்கியிருக்கிருனே அவனே "யோகி"; அவனே மேலான தத்துவத்தை நிதரிசனமாகக்கண்ட "தற்பரன்" இப்படி மனத்தையடக்கியாளுதல் இலகுவான வேலையல்ல வாதலால் அப்படிப்பட்டவன் தானே "அதிதீரன்." இவ்விதக்குணங்கள் வாய்ந்தவர்களில் ஒருவர் ஸர் உவில்லியம் க்ரூக்ஸ் என்பவர்.

வயது 85-ஆகியும் அவருக்குக் கண், காது முதலிய இந்திரியங்களின் சக்தி சற்றும்குறையவில்லை. 35-வயசில் எவ்வளவு தீக்ஷண்யமாயிருந்தனவோ அப்படியே இப்பொழுதும் இருக்கின்றன என்கிருர். மனோசக்தியும் குறையவில்லை. வேலை செய்வதிலும் பின்வாங்குவதில்லை. இப்படிவயதில் மூத்தோராகியும் கருவிகரணங்களுக்கு மூப்பணுகா வண்ணம் மனோசுத்தியினுலும் விடாமுயற்சியினுலும் திடகாத்ரசித்தராய் இருப்பது உண்மையில் உளவறிந்து உழைப்போர்க்கு வாய்க்கும் உத்தமசித்திகளில் ஒன்ரும். அப்படிப்பட்ட திடகாத்ரம், திடசித்தம் இரண்டும் இவருக்கு லபித்திருக்கிறது. 35-வயதில் அவருக்கு இருந்த உற்சாகம் இப்பொழுது குறையவில்லை. ஆனுல் அவருடைய அபிப்பிராயங்களை வெளியிடுவதில் ஆரத்திர அமர்ந்து பேசும் சுபாவம் மட்டும் வயது முதிர்ந்ததின் பலனுக மேலிட்டிருக்கிறது. அன்றியும் அடக்கம் பொறுமை யிரண்டும் மிக அதிகரித்திருக்கிறது. இவையன்றி வேறு மாறுதல்கள் இல்லை. "மூப்பணுகா ஊக்கம்" அவரிடத்துப் பூரணமாயிருக்கிறது என்று இவரைக்கண்டு பேசின ஒருவர் ஒரு ஆங்கில பத்திரிகையில் எழுதி வெளியிட்டிருக்கிருர்.

SIR WILLIAM CROORES ON THE WAR.

இப்படிப்பட்ட மேலான குணங்களுடையவர் இப்பொழுது நடக்கும் பாரதப்போராம் மஹா யுத்தத்தைப்பற்றி என்ன சொல்கிருர் என்பதைக்கேட்க எல்லாருக்கும் ஆவலிருக்குமாதலால் அவர் சொன்னதை இங்கு வெளியிட்டு எழுதுகிருேம். மேலான விஷயங்கள் குழந்தைகள் மனதுக்குக் கோசரமாகாது என்று சொல்லுவர். இது உண்மையே. ஆனுல் "விஷயங்கள்" என்பதின்பொருள் இன்னதென்றுணராமல், மேலானதத்துவ உண்மைகளும் குழந்தைகள் மனதில் ஏறுதென்று நினைக்கிருர்கள். தத்துவங்கள் எல்லாவற்றிலும் மிகமேலாய் உன்னத ஸ்தானத்திலிருப்பது உள்ளன்பு. இந்த உள்ளன்பைக் குழந்தைகள் உணருவதில்லையென்று சொன்

னால் யாராவது நம்புவார்களா? குழந்தைகளைப்பெற்று வளர்த்த தாய்மார் என்னதான் ஏட்டுப்படிப்பு இல்லாதவராயிருப்பினும் இந்த அபிப்பிராயம் தப்பு என்று அனுபவ சித்தாந்தமாய் உணர்ந்து உரைப்பரல்லவோ. பெரியோர் தத்துவவிசாரணை செய்வதெல்லாம் குழந்தைமனத்தின் சாதகம்கொண்டேயாதலால், குழந்தைகளின் பக்குவமறிந்து போதிக்கும் சக்தியின்மையினால் உண்டாகும் அநர்த்தத்தைக் குழந்தைகள்மேல் ஏற்றி அவர்களுக்கு சுபாவமாயுள்ள மனோசக்தியை மழுங்க அடிக்கிறார்கள். "பேதமையென்பது மாதர்க்கணிகலம்" என்றால் மௌட்டியத்தைப் பூஷணமாகச் சிறப்பித்துச் சொன்னதாக அர்த்தம்செய்து அநர்த்தம் விளைவிக்கும் மேதாவிகள் வேறு என்னதான் அநர்த்தம் விளைக்கமாட்டார்கள்! இது நிற்க.

ஸர் உவில்லியம் க்ருக்ஸ் என்பவர் மனோதத்துவசாஸ்திர விசாரணைசெய்து இப்பொழுது 30-வருஷமாகிறது. அதில் சென்ற 30-வருஷகாலமாய் நூதன விசாரணையொன்றும் செய்திலர். ஆயினும் பூததத்துவ சாஸ்திரத்துறையில் பூரணமாய் விசாரணை செய்துள்ளார். அவர் தீரவிசாரணைசெய்து வந்துள்ளமுடிவு என்னவென்றால், 'ஜீவதத்துவத்துக்கு ஜடதத்துவாதாரத்தைக் கொண்டுமட்டும் காரணங்கூறுவது முடியாத காரியமாயிருக்கிறது" என்பதே. ("Impossible to account for Life on mechanical grounds.") மற்றொரு தீர்மானம் அவர் உள்ளுணர் உண்மையாகக் கொண்டுள்ளார். அது என்னவென்றால், "நான்" என்னும் ஆணவ புருஷன் இந்த ஸ்தூலதேஹம் விழுந்துபோன பின்னும் (மரணத்துக்குப்பின்னும்) அஹம்பாவம் நீங்காமல்தானே வேறு லோகங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறான், என்பது. இந்த உண்மையையே சிவவாக்கியர் "சித்தில்லாதபோது ஜீவன் இல்லை இல்லை யில்லையே" என்று பறையறைந்து ஓதியிருக்கிறார்.

அஹம்பாவ புருஷனாகிய சிதாபாஸன்தானே ஜீவன். இந்த ஜீவன் "சித்" இல்லாதபோது இல்லையென்று சொன்னார். அதனால் "சடம்" இல்லாதபோது இல்லையென்று அர்த்தமாகாதே. ஸர் உவில்லியம் க்ருக்ஸ் "சடதேகம்" இல்லாமல் ஜீவன் இருக்கலாம் என்று சொல்கிறார். ஆதலால்தான் நம்மில் பெரியோர்களாயுள்ளவர்கள் தேஹத்தை ஸ்தூல, சூக்ஷ்ம, காரணமென மூவகைத்தாகப் பிரித்தார்கள். காரண தேஹமாகிய அவித்யா வாசனையாம் "அஹம்பாவம்" உள்ளவரையில் ஜீவனுக்குப் பிறப்பு இறப்பு சகடக்கால்போல் சுற்றிக்கொண்டே வருகிறது. ஸ்ரீபுரா ரஹஸ்யத்தில் இந்த உண்மையை வெகு அழகாக வெடுத்துக்கூறி யிருக்கிறார் ததாத்திரேயர்.

"This War does not shake his faith in the Providence of God" இந்தப் பார'தப்போர் நேர்ந்ததனால் எத்தனையோ பேர்கள் வீணாகக் கொல்லப்படுகிறார்கள். 50 லக்ஷம்பேர் மடிந்திருக்கிறார்கள். சண்டை செய்யும் ஒவ்வொரு தேசத்தார் கக்ஷியிலும் சுமார் 10-லக்ஷம் பேர் விழுந்திறந்திருப்பார்கள். பிரிடிஷ் கவர்ன்மெண்டார் யுத்தச்செலவுமட்டும் ஒருநாளைக்கு 30-லக்ஷம் பவுன் ஆகிறது. இந்தமதிப்புப் போதுமானதாயின்றி இதற்கு மேலும்கூட செலவாய் வருகிறது. இப்படியே ஒவ்வொரு தேசத்தார் சண்டைச் செலவையும் கணக்கிட்டுப் பார்த்தால் ஒரு நாளைக்கு இந்த யுத்தத்தினால் கோடி பொன் செலவாய் வருகிறதென்று சொல்லலாம். தினம் ஆயிரம் பதினாயிரம் என்று யௌவன புருஷர்கள் யுத்த களத்தில் விழுந்து மடிந்து போகிறார்கள்.

ஜெர்மானியர்கள் மதச் சார்புடையவர்களென்று உலகப்பிரசித்தி பெற்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய மதம் இந்த சண்டையைக் கொண்டு பார்க்கில் கேவலம் லோகாயத மதமாக விருக்கிறது. ஜடசக்தியை பெரிதாகக் கொண்டாடுகிறார்களென்று தெரிகிறது;

இந்த லோகாயதமதம் இம்மஹா யுத்தத்தால் பிரக்கியாதி யற்றுச் சீரழியுமென்று ஸர் உவில்லியம் க்ரூக்ஸ் சொல்லுகிறார்.

மனோ சுத்திக்காக உழைத்து வந்த நம்மை மதசம்பந்தமாயுழைக்கிறவனென்று சொல்லிய மேதாவிகள் இவர் சொல்வதற்கென்ன சொல்வார்களோ! சடசக்தியையே பெரிதாக நம்பி மதபோதகர்களைக்கொண்டு "வல்லான் வகுத்த தேவாய்க்கால்" என்கிற சித்தாந்தம் ஜனங்கள் மனதிற் பதியப்போதித்து வந்த மதம் இச்சண்டையினால் அபவாதப்பட்டு அபக்கியாதிக்காளாகி யொழியுமானாலும், அந்தர்யாமியாயுள்ள சூக்ஷ்மப்பிரகிருதியில் ஆத்மசக்தி விளங்கும் உண்மையான ஆத்ம போதம் (Faith in the Spiritual reality underlying an interpenetrating all physical appearance is not likely to suffer from the horrors of this war) ஜனங்கள் மனதைக் கவர்ந்து ஊசியைக் காந்தமிழுப்பதுபோல் அவர்கள் சித்தத்தை வசிகரித்து சித்தசுத்தியை யளிக்கும் உண்மையான உள்மதம் இந்த யுத்தத்தின் கொடுமைகளால் ஒரு போதும் குறையாது. அதிலுள்ள நம்பிக்கை யின்னும் அதிகமாகி ஆத்மசக்தியின் மஹிமை இந்தச் சண்டையினால் இன்னும் விசேஷமாய்ப் பிரக்கியாதி பெற்று விளங்கும் என்பது அவருடைய துணிபு என்று கூறியுள்ளார்.

"பூததத்துவ சாஸ்திர விசாரணை மட்டும் செய்து வந்தால் அதனால் உண்மை விளங்குவதாயில்லை, ஆத்ம திருப்தியும் ஏற்படுவதில்லை" யென்று சொல்கிறார். பூததத்துவ சாஸ்திரமென்பது ஜீவனின் ஆத்மானந்த சுகத்துச்கு அப்புறப்பட்டதா யிருக்கிறது. ஆத்மானந்த சுகவிருப்பம் எப்போதும் ஜீவனை ஜடதத்துவங்களை விட்டொழித்து ஆத்ம தத்துவங்கள் வேலை செய்யும் பூமிகையை நோக்கிப் போகச் செய்யும் என்பது திண்ணம் என்கிறார். "organised religion" மதக்கட்டுப்பாடும், அதன் பலனாகிய (clericalism) மதபோதகர் செல்வாக்கும் இச்சண்டையினால் சீரழிந்து சிதைவுறலாம்; ஆனால் சமயாதீதமான உண்மைமதம் ஒருக்காலும் அழியாது. அதற்கு ஒருபோதும் கேடில்லை. ஏனெனில் அது ஸநாதநமானது. அப்படி யென்றால் அழியாமல் என்றென்றைக்கும் சாசுவதமாயிருக்கப்பட்டது என்று உறுதி கூறியிருக்கிறார்.

இந்த யுத்தம் உலகுக்கு நன்மை பயக்குமோ தீமை பயக்குமோ என்று இப்பொழுது சொல்ல முடியாது என்கிறார். சிலருக்கு அது தேவாசுரர் யுத்தம் போல் தோன்றுகிறது. நன்மைக்கும் தீமைக்கும் எப்போதும் விரோதம் இருந்துகொண்டே தானிருக்கும். இப்படியாக வுள்ள நித்தியப்போர் வேறு எந்த அண்டத்தில் பிரமாதமாக நடக்கிறதோ தெரியாது. அதன் பிரதிபிம்பமாகவே இந்த யுத்தத்தைக் கருதுவாரும் உளர். நன்மை தீமை யென்கிற எதிர்மறைஜோடி (தொந்தம்) உள்ளவரையில் தொந்தப்போரும் எப்போதும் நடந்துகொண்டேயிருக்கும். இந்த தொந்தப்போர் எக்காலத்திலும் உள்ளதேயாயினும் ஒவ்வொரு சமயம் காட்டுத் தீபோல் பெரிய யுத்தமாகத் தோன்றுவது முண்டு. அக்னி எங்கும் வியாபகமான சக்தி. தீக்குப் பற்றுதல் சுபாவம். அப்படி தீப்பற்றி யெரியும்பொழுது அதன் வேகம் ஒரு அண்டத்திலிருந்து மற்றொரு அண்டத்துக்கும் தாவிப்பரவலாம் என்கிறார்.

இப்படியாக இந்தயுத்தத்தின் காரணகாரியங்கள் எப்படியிருப்பினும் இதன் முடிவு எப்படியிருக்குமோவென்று மட்டும் சந்தேகிக்க வேண்டியதில்லை யென்று சொன்னார். "தர்மமேஜயம்" ("Victory is on the side of Righteousness") என்னும் வாக்கு ஒருக்காலும் பொய்க்காது. ஆகையால், தர்மத்தையே சரண்புகுந்து தர்மத்துக்காகவேயுழைக்கிறவர்கள் பக்ஷம் எப்படியும் ஜயிக்கும் என்று பூரணநம்பிக்கைவைத்து ஜயம்பெற வுழையுங்கள்; உண்மையே வெல்லுமென்று ஊக்கங்கொண்டு உழையுங்கள்—என்று பறையறைந்தாற்போல தர்மோபதேசம் செய்து உற்சாகமிகுந்தவராய் அவரை நெருங்கியவருக்கும் உற்சாகமுண்டாக வெகு தீரமாய்ப்பேசினாரென்று சொல்லியிருக்கிறார். அவருடைய கடைசிவாக்கு இது:—"Right will conquer. Truth will make us free." தர்மமேஜயம், ஸத்யமேவஜயதே: ஸத்யமே நமக்கு ஸ்வதந்தரமளிக்கும், என்று கூறினார்.

## "MORAL INSTRUCTION IN ELEMENTARY SCHOOLS."

### (Circular by the Director of Public Instruction.)

### பாலபோதசிக்ஷா சாதனம்.

" பெற்றோர்கள் தாமுவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றோ மெனவுணர்ந்து கற்பர்பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத்தா லிகழில் வந்ததென்னெஞ் சேபிறழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

1. "All officers are informed that the journal "Vivekachintamani" of which they have each received a copy has been declared suitable for use in elementary schools in which Tamil is the medium of instruction."

2. "The journal might be read with advantage in Teachers' Associations and in connection with moral instruction in Schools"—Extracts from 'Circular Memo.' issued by the Inspector of Schools.

சென்னை வித்யா இலாகா தலைவர் பிரதம வித்யாசாலைகளில் படித்துத் தேறவிரும்பும் மாணவர்கள் நன்னடக்கை அல்லது ஸன்மார்க்க விஷயமாகவுள்ள முக்கியாம்சமான பிரதமவிதிகளையறிந்திருக்க வேண்டுமென்றும் அவைகளில் கேட்கும் கேள்விகளுக்கு உத்தரமளிக்கும் திறமையிருக்க வேண்டுமென்றும் சொல்லி ஒரு ஒட்டுத்தரவு (circular) பிறப்பித்திருக்கிறார். அது "இன்ஸ்பெக்ஷன்கோட்" என்று சொலும் வித்யா இலாகாதாரார் வெளியிட்ட விதிகளடங்கிய புஸ்தகத்தில் மூன்றாவது அனுபந்தமாக அச்சிட்டு வெளியாகியிருக்கிறது.

இதனால் பிள்ளைகளுக்குச் செய்யும் சன்மார்க்க உபதேசம் மதபோதனையோடு சேர்ந்து போதிக்கப்படலாம் அல்லது வேறுபாடங்கள், வாசகம், சரித்திரம் முதலானவற்றில் வரும் விஷயங்களைக்கொண்டு திருஷ்டாந்த தாஷ்டாந்தபூர்வகமாகப் போதிக்கப்படலாமென்று பரிஷ்காரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஸன்மார்க்கமாவது ஸத்தியமார்க்கம். அதுவே நன்மார்க்கமாகும். ஸத்தியம் இரண்டுவிதம். என்றும் அழியாது யாராலும் அழிக்க முடியாததாய் தானேதானாய், தன்மயமாய், திரிகாலங்களிலும் மாறாது சாசுவதமாய் இருப்பது ஒன்று. இந்த ஸத்யம் அறிவுமயமாய் இருந்து அறிவானந்தமாய் விளங்குகிறது. இதைச்சுட்டுவான்தானே திருவள்ளுவநாயனார்.—

" கற்றதனா லானபய னென்கொல், வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்."—என்று

ஓதியிருக்கிறார், மேலறிவுக்கிருப்பிடமாயுள்ள கடவுளின் திருவடியை உணர்ந்து உகந்து தொழப்பெறாதவர் கற்றகல்வியினால் என்ன பயனாகும்? என்று கூறியிருக்கிறார். அதாவது அந்தக்கல்வி பயனற்றது என்றபடி. பள்ளிப்பிள்ளைகள் நல்வழிபற்றி நடக்கப்பழகுவது அவர்களுடைய பெற்றோர்கள் போதகாசிரியர்கள் (உபாத்தியாயர்கள்) நடத்தையைப் பொறுத்ததாயிருக்கும், குழந்தைகளுக்கு நல்லொழுக்கம் படியும்பொருட்டு உபாத்தியாயர்கள் பிரதம வித்யாசாலைகளில் பிள்ளைகளுக்குப் போதிக்கவேண்டிய அம்சங்களை வித்யா இலாகாத்தலைவர் வெளியிட்டிருக்கும் (Circular) ஒட்டுத்தரவின் ஒருவாக்கியத்தில் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது.

பிரஹ்லாதன் "நமோநாராயணவித்தம்" என்று சொல்லி எவ்வகைக் கொடுமைக்கும் அஞ்சாத ஸ்திரமான ஆஸ்திகபுத்தியுள்ளவனாக்காட்டியது அவன் கருப்பவாசமாயிருக்கையில் நாரதர் செய்த உபதேசத்தினால் பலித்தது என்கிறார்கள். இதையேதான் (Eugenics) எனப்போதிப்பார் 'பிறவிக்குணம்' என்பார்கள். இந்த (Law of Heredity) என்னும் பிறவிக்குணதர்மத்தை சிருஷ்டிதர்மங்களில் ஒன்றாக இந்தக்கதை (உதாரணத்தால்) விளக்கிக்காட்டின தன்றிவேறல்ல. இப்படியாக "விளையும் பயிர் முளையிலே" யென்றபடி பாலப் பருவத்திலேயே நல்லொழுக்கம் படிய பெற்றோரும் போதகாசிரியர்களும் குழந்தைகளுக்கு ஹிதோபதேசம் செய்து சத்சங்கப்பழக்கமும் சுபவாசனையும் ஸித்திக்கச் செய்யவேண்டியது

அத்யாவசியகமாயிருக்கிறது. ஆதலால், வித்யா இலாகாத்தலைவர் இங்கிலீஷில் பிறப்பித்துள்ள உத்தரவிலிருந்து குழந்தைகளுக்குப்படியவேண்டிய நல்லொழுக்கங்கள் இன்னவையென்று குறிப்பிட்டுரைக்கும் வாக்கியத்தை அப்படியே இங்கிலீஷில் அச்சிட்டு அதன் கருப்பொருளை ஆங்கிலமறியாதாரு முணரும்படி தமிழில் விளங்கச் சொல்லுவோம்.

Para. 2. "It should be the aim of each teacher to see that the children are brought up in habits of cleanliness, punctuality, good manners and language and to impress on them the importance of cheerful obedience to duty—of patience—of consideration and respect for others—of honour and truthfulness in word and act—of temperance, courage and perseverance—of kindness towards all living creatures but especially to those weaker than themselves.......It will be found natural in most cases to base instruction on the relation of child and parents—and to advance therefrom to the relations of the child to his family—his teacher—his classmates and friends—and society at large as represented by residents of the locality."

"3. Whatever efforts may be made to stimulate the moral sense by instruction whether direct or indirect, it should always be remembered that example is more efficacions than precept and that the tone of the school depends largely on the personal character and conduct of the teachers."

"4. With religious teaching the department is in no way concerned and Inspecting officers will be asked to be most careful to avoid trespassing in this sphere ..At the same time it should be remembered that the instructions given above are not intended to encourage the treatment of moral instruction as a subject separate from religious instruction in schools where the latter kind of teaching is possible. *The Great truths of religion are common to all mankind and are liable to lose their force when treated in isolation from one another.*"

ஸர்வமத ஸம்மதமான உண்மைகள் மன்குலத்துக்கெல்லாம் பொதுவாயிருக்கின்றன. அவற்றைச் சிறப்பித்துச் சொல்லும் மதபோதனைகளினின்றும் அவ்வுண்மைகள் பிரித்துப் போதிக்கப்பட்டால் அவற்றின் போத சக்தி குறைந்து போம். ஆதலால் வித்யா விசாரணை கர்த்தர்கள் ஸன்மார்க்க போதம் சரியாக நடந்து வருகிறதா என்று பார்க்க குழந்தைகளின் மனப்பயிர்ச்சி யெப்படி யிருக்கிறதென்று மட்டும் தெரிந்துகொண்டு மதபோதனை விஷயங்களில் சிறிதும் தலையிட்டுக்கொள்ளக் கூடாதென்று கண்டிப்பாய் எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள்.—இது நிற்க.

குழந்தைகளுக்குப் நல்லொழுக்கம் படியச் செய்வதில் உபாத்தியாயர்களுடைய நோக்கம் எப்படியிருக்கவேண்டுமென்று வித்யா இலாகா தலைவர் குறிப்பாய் விளக்கிக் காட்டியிருப்பதையெடுத்துத் தமிழில் விளங்கக் கூறுவோம்.

குழந்தைகளுக்கும் பின்வரும் நல்லொழுக்கங்கள் படியும்படி உபாத்தியாயர்கள் ஜாக்ரதையாயிருந்து பார்த்து நடத்தவேண்டியது.

1. Habits of cleanliness.—சுத்தம், சுசி. இது தேஹ சுத்தம், மனோ சுத்தம், பண்டம் பாடிகளின் சுத்தம் ஆகிய இவையெல்லாவற்றிற்கும் பொருந்தும். இது அப்பியாச முதிர்ச்சியில் ஹிருதய சுத்தியை உண்டுபண்ணும். அதிலிருந்து 'திருவருட்பேறு' என்னும் கல்வியின் பயன் சித்திக்கும்.

2. Punctuality.—ஒழுங்கு தவறாது நடத்தல். இது ஸ்திரபுத்தி, தீர்க்காலோசனை, விசார ஞானம் என்கிற சம்பத்துக்களை யளிக்கும். "எண்ணித் துணிவது கர்மம், துணிந்தபின், எண்ணுவ மென்பது இழுக்கு" என்னும் வைராக்கிய தீரத்தை யுண்டுபண்ணி, நினைத்தது முடிக்கும் ஆற்றலை (சக்தியை) அளிக்கும்.

3. Good manners and language.—மட்டு மரியாதையோடு கூடிய நல்ல மாதிரி நடத்தை, சுபாஷித வாச்கு. இவ்விரண்டும் ஜனசமூகத்தில் ஹிதமாகப் பழகி வருவதற்கான சாதனங்களாயிருந்துதவி அப்பியாச முதிர்ச்சியில்

சமஷ்டி ஞானத்தோடு சுகிர்த லாபத்தை யளிக்கும்.

4. Cheerful obedience to duty.—செய்கடனுக்குப் பின்வாங்காமல் உகந்து செய்யும் தன்மையும்பழக்கமும் படியச்செய்யவேண்டும். இது நிர்ப்பந்தத்தினால் படியுச் செய்பக்கூடிய மனப்பழக்கமன்று. செய்கடனைச் செய்வதினுள்ள அறிவுவிர்த்தியாம் ஆத்ம லாபத்தை யுணர்ந்து உணர்ந்தபடி அவ்வழியில் நின்றுழைப்பதற்கான மனப்பழக்கம் வேண்டும் இதற்கு இந்திரியங்களை மனோ விலாசத்திலடக்கி, மனோ விலாசத்தை இஷ்டம்போல் அடக்கியாள்வதிலுள்ள சந்தோஷ மின்னதென்றுணரல்வேண்டும். இது சத்சங்க சுபவாசனையாலும் பால சிக்ஷையில் பெரியோர் சகவாசம் லபிப்பதாலும், மேலோர் சரித்திரங்களைப் படித்துச் சிந்திப்பதாலுமே படியவேண்டும். பிள்ளைகளின் மனோ பக்குவத்தை யறிந்து அவர்களுடைய சக்திக்கு மிஞ்சின வேலையிடாது, சக்தியானுசாரம் வேலையிட்டு, இட்ட வேலையைத் தொடுபிடியாய்த் கொட்டுமுடிப்பதினால் உண்டாகும் மனக்கிளர்ச்சியும் அறிவுவிர்த்தியும் அதனுலுண்டாகும் இன்பமும் இன்னதென்று அவர்கள் உணரப் பழக்கல்வேண்டும். இந்தக் குணம் எல்லாக் குழந்தைகளிடத்தும் ஏறத்தாழ சுபாவமாகவே ஆத்ம சக்தியாக அமைந்துள்ளது. அதைப் பக்குவமறிந்து பயிர் செய்து வள்ர்க்கவேண்டும்.

5. Patience.—பொறுமை, சாந்தம். "சக்திக்குவித்து தனது உபசாந்தமே" என்று பெரியோர் வாக்கிருப்பதால், இதற்கு முன்னாலே சொன்ன மனப்பழக்கம் படியப்படிய, "நல்ல காரியத்துக்கு நாலாயிரந்தடை" யென்பது உலக தர்மமாதலால், நல்ல காரியத்தைத் தடையறுத்து இனிது முடியச் செய்துமுடிக்க இடையில் நேரும் இடுக்கண்களைப் பொறுத்துக்கொண்டு அவற்றை வெல்வழி தேடும் குணமும், அந்த குணத்தினால் வரும் நினைத்தது முடிக்கும் ஆற்றலும், சாந்தம் என்கிற மனம் தடுமாறாது நிச்சலமாக விருக்கும் நிலையின்றி சித்திக்காததலால், சாந்தமும் தானே சித்திக்கும்.

6. Consideration and respect for others.—பரோபகார சிந்தை என்னும் மனப்பழக்கத்தில் இவை இரண்டும் அடங்கும். இதற்கு சுயநயம் பாராட்டாது பிறர்நயம் பாராட்டும் குணம் இன்றியமையாதது. இது தேஹ பாவனையும் அதனால் வரும் வயிற்றுப் பாடே பாடு என்கிற கொள்கையும் நீங்கினாலன்றி சித்திக்காது. "நாம் உழைக்கப் பிறந்தோம்: உழைப்ப உழைக்கின் எல்லாருக்கும் ஏற்றத் தாழ்ச்சியின்றி படியளக்கும் பகவான் கூலி கொடுக்காது போகார்" என்கிற திடசித்தம் உண்டாகவேண்டும். இந்த அந்தர்பாவம் அமைந்தால் தான் பிறர்நயம் பாராட்டல் சாத்தியமாகும். இஃதின்றி பரோபகாரம் செய்வதாகச் சொல்வதெல்லாம் வீண்வேஷமன்றி அதில் உண்மை யில்லை.

7. Honour and truthfulness in word and act.—இதற்குத் திரிகரண சுத்தியென்று சொல்கிறது. பொய் பித்தலாட்டம் செய்வதால் அறிவுக்குள்ள மஹிமை போய்விடும். அஃதோடு கண்யமும் போம். வாக்கும் நடத்தையும் ஒன்றுபட நடப்பது உண்மையுள்ளவர்களிடத்தில் தான் சகஜமாயிருக்கும். மற்றவர்களிடத்தில் இவை பேதப் பட்டேயிருக்கும். இது உலகசுபாவம். ஆயினும் அது அறியாமை காரணமாக ஏற்பட்டு நடப்பதால் அதனாலுண்டாகும் அனர்த்தபரம்பரைக்கு அளவு சங்கையில்லை. "கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளில் வெளியாகும்" என்கிற

பழமொழி ஸத்தியம் நிலைக்குமேயன்றி அஸத்தியம் நிலைக்காது என்பதை வற்புறுத்துவதாயிற்று. ஔவையார் "நிலையில்லாக் காரியத்தை நிறுத்தவேண்டாம்" என்று சொன்னதும் இது பற்றியே. "நல்ல காரியத்திற்கு நாலாயிரம் தடை" யென்பது உலகதர்மம். "கல்வியைக் கல்: கற்றபடி நில்" என்றார் பெரியோரும். கல்வியென்றால் மனப்பழக்கம். மனப்பழக்கத்தினால் வித்தியா சம்பந்நனாகும்படி வித்யாப்பியாசம் செய். அந்த அப்பியாசம் முதிர்ந்து சகஜானுபவமாகவேண்டி அந்த அப்பியாச வழியில்தானே 'கற்றபடி' (மனதை யடக்கக் கற்றபடி) நின்று பார். அப்பொழுது திரிகரண சுத்தியினாலுண்டாகும் பரமலாபம் நிதரிசனமாகப்படும். நினைப்பதொன்று சொல்வதொன்று செய்வதொன்றாகவுள்ள பழக்கம், மனதைக் குழப்பத்தில் வீழச்செய்து சிந்தாகுலத்தை யுண்டுபண்ணிச் சீரைக்குலைக்கும்.

8. Kindness towards all living creatures—ஜீவகாருண்யம். இஃதன்றி மனிதன் மிருகப் பிராயனாகிறான்.

9. Especially towards those weaker than themselves.—"எளியாரை வலியார் அடித்தால் வலியாரைத் தெய்வம் அடிக்கும்" என்பதின் உண்மையை ஓர்ந்து ஏழைக்கிரங்கி, "ஏழைபங்காளனும்" பகவானுடைய கிருபைக்குப் பாத்திரமாகவேண்டும்.

10. இதற்குப் பரமசாதனமாயுள்ளது "Social-Service." இதைக் குழந்தைகளுக்குப் போதிக்கும்வழி சோபானக் கிரமமாக மேற்படி ஒட்டுத்தரவின் இரண்டாவது பாரா கடைசி வாக்கியத்தில்' சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தப்பதினைந்து வருஷகாலமாக விவேக சிந்தாமணி போதித்து வந்ததெல்லாம் வித்யா இலாகாத்தலைவர் அவருடைய உத்தியோக முறையில் வெளியிட்டிருக்கும் இந்தப்பத்துப் போதனைகளில் அடங்கினவையன்றி இவைக்கு அந்நியமாக ஒன்றுமில்லை. அறிவைப் பரவச் செய்யவென்று நாமுழைக்கத்துவங்கி இப்பொழுது 30-வருஷ காலமாகிறது. இதில் சென்ற 20-வருஷகாலமாக ஸன்மார்க்க போதனையைப் பற்றித் தீரவிசாரம்செய்து சரியான போதனை முறையின்ன தென்பதைப் பலவாற்றானும் ஆராய்ந்துணர்ந்து அனுபவபூர்வகமாய் மனதை நல்வழியில் பழக்கும்முறையை அனுசரித்துப்பார்த்துக் குழந்தைகளுக்கு நல்லொழுக்கம்படிய பாலபோத சிக்ஷைசெய்யும் வகையைக் கிரகித்து ஓதிவந்தோம். நாம் ஓதிவந்த உண்மைகள்தானே பாலபோத சிக்ஷா சாதனமாகப் பிரதம பாடசாலைகளில் போதிக்கப்பட வேண்டுமென்று வித்யா இலாகாத்தலைவர் உத்யோகமுறையில் பிறப்பித்திருக்கும் ஒட்டுத்தரவில் கண்டிருக்க, அதையெல்லாரும் உணர உணர்த்தலானோம்.

---

MORAL INSTRUCTION IN ELEMENTARY SCHOOLS—The Educational Committee of the Children's Movement has addressed a Circular Memorandum to Local Bodies and officers in charge ot Elementary education in schools, soliciting their co-operation, with a view to their taking early and effective action in the matter of providing an efficient aid for moral instruction in Elementary schools under their control. The Memorandum draws the attention of all concerned to the suitability of the *Vivekachintamani*, as an indispensable companion and aid to teachers in imparting moral instuction in Elementary schools, and appeals to them "to see that every Tamil school is provided with one copy at least" of the *Vivekachintamani*, which has been converted into a school-journal suitable for use in all Tamil Elementary schools and supplied to all the Government educational institutions and officers in charge of Elementary education in Tamil Districts, on the recommendation of the Director of Public Instruction, sanctioned by Government.-*The Madras Mail* 1st Octr. 1915.

## CUTTLE FISH.

### * கடல்நுரை ஜந்து.

நான் ஒருதடவை ஒரு தனவந்தர் வீட்டிற்குப் போயிருந்தேன். அங்கேயும் இன்னும் மற்ற பெரியமனுஷியர்கள் சிலர் வீடுகளிலும் வெகு நேர்த்தியான கையெழுத்துப் படங்கள் சில பார்த்திருக்கிறேன். இவைகள் அனேக வர்ணங்கள் உபயோகப்படுத்தி எழுதப்பட்டவைகளல்ல. ஒரே ஒரு வர்ணமே உபயோகப்படுத்தப்பட்டிருந்தது. ஆனால் அந்த வர்ணத்தை சில இடங்களில் மெல்லிதாகவும், சில இடங்களில் கனமாகவும் உபயோகப்படுத்தியிருந்தது. இந்த வர்ணத்தின் மாதிரி, வெகு கொஞ்சம் சிகப்புக்கலந்த நல்ல கறுப்பு மசிபோலிருக்கும். இந்த வர்ணத்தினால் எழுதப்பட்ட படங்கள் வெகு ஜாஸ்தி விலையுள்ளவைகள். ஏனென்றால் இந்த வர்ணம் அகப்படுவது எளிதல்ல. இந்த வர்ணம் ஸமுத்திரத்தில் வசிக்கும் ஒரு ஜந்துவின் உடம்பிற்குள்ளிருக்கிற சிறு பையிலிருந்து எடுக்கப்படுகிறது. இது நாம் ஸாதாரணமாகப் பார்க்கிற ஜந்துவில்லை. இந்த ஜந்துவின் உடம்புக்குள்ளிருக்கும், நம் தேகத்திலுள் உள்ள எலும்புக்கூடுபோல் கெட்டியான பாகம்தான் கடையில் வெகு ஸாதாரணமாக கடல்நுரை யென்று விற்கப்படுகிறது. இதைக் கற்பலகைகள் உபயோகப்படுத்துகிற சிறு பிள்ளைகள் தங்கள் பலகைகளைத் தேய்த்து சுத்தம்செய்ய எப்பொழுதும் தங்கள் சட்டைபையில் வைத்துக்கொண்டிருப்பார்கள், பள்ளிக்கூடங்களில் கணக்கு முதலியது எழுதி தெரிவிக்கவேண்டியதற்கு உபயோகப்படுத்துகிற, முக்காலிமேல் தூக்கிவைத்திருக்கிற, கறுமை பூசிய பெரும் பலகைகளையும் இக்கடல்நுரை போட்டுத் தேய்த்தே சுத்தம் செய்கிறார்கள். காதில் குடைச்சல் உண்டானால் இக்கடல்நுரையில் பாலாக இருக்கும் பாகத்தில் சிறிது கிள்ளிப்போட்டு நல்லெண்ணெயில் காய்ச்சி காதில் விட்டுக்கொள்ளுவார்கள்.

இக்கடல்நுரையின் ஒருபக்கம் எலும்புபோல் உறுதியாகவும் மற்றொருபக்கம் மிருதுவாகவும் இருக்கும். மிருதுவாயிருக்கும் பக்கத்தை உற்றுப்பார்த்தால் வரிசைவரிசையாகக் கோடுகள் தெரியும். இளம்பருவமான ஒரு ஜந்துவின் இவ்வெலும்புக்கும் முதிர்பருவமான ஜந்துவின் எலும்புக்கும் வித்தியாஸம் எலும்பின் பிரமாணத்தினால் மாத்திரமல்ல, இதின் உள்பக்கத்திலுள்ள மேற்சொன்ன மிருதுவான வஸ்துவின் அடுக்குகளின் எண்ணின் ஜாஸ்தி குறைவினால் கூட அறிந்துகொள்ளலாம். இம்மிருதுவான வஸ்து குணத்தில் சிமைச்சுண்ணாம்புக்கு ஒப்புள்ளது. ஜந்துவின் முதிர்வயதிற்குத் தக்கபடி இது அடுக்கடுக்காய் ஜாஸ்தியாகிக்கொண்டு வரும்.

கடல்நுரையின் ஒரு நுனியில் ஒரு முள்ளு இருக்கும். இந்த நுனி இருக்கும் பக்கம் ஜந்துவின் தலைப்பக்கம். இந்தப்பக்கத்தில் இஜ் ஜந்துவுக்கு பத்து (10) கைகள் உண்டு. இவை மெலிந்து நீண்டு இருக்கும். இப்பத்துக்கைகளுள் இரண்டுமாத்திரம் மற்றவைகளைக்காட்டிலும் வெகு அதிகமாக நீண்டிருக்கும். ஒவ்வொரு கையின் நுனியிலும் உருஞ்சும் வாய்கள் அனேகம் இருக்கின்றன.

இந்த ஜந்து மழைநாட்களில் விசேஷமாக நிலத்தில் ஊர்ந்துவரும் "பாம்புக்குத் தண்ணீர் கொண்டுபோகிறது" என்று பெயர் வழங்கும் நத்தையின் சாதியைச் சேர்ந்தது. இரண்டு பெரியகண்களுள்ளது. கைகளின் நுனியில் உள்ள உருஞ்சும் வாய்களைத்தவிர வேறு தனியாக வாய் கிடையாது. இந்த உருஞ்சும்வாய்கள் வழியாக அனேக சிறுபூச்சிகளை கடல்நீருடன் உருஞ்சிக்கொண்டு சாப்பிடும். இதின் அபானத்துவாரம் (anus) தலைப்பக்கத்திலேயே இருக்கிறது. இதன் தேகத்தில் சிகப்பான இரத்தம் ஓடுகிறது. இதன் இருதயம் கவனித்துப்பார்த்தால் வெகு வேடிக்கையாகவிருக்கும். இது சுவாசிக்கிறது மீன்களைப்போல. இதன் உடம்பினுள் ஒரு பை இருக்கிறது. இந்தப்பை ஜந்துவின் அபான வாயில் வழியாகவே துறக்கிறது. இப்பையில் தான் நான் முன்சொன்ன வர்ணம் சேர்த்து வைக்கப் பட்டிருக்கிறது. ஒருமுதிர்ந்த கடல்

* *Sepia officinalis.* Common uame—Cuttlefish.

நுரை ஜந்துவினிடமுள்ள இந்தப்பையில் ஒரு (tea spoon) சின்ன உத்தரணி அல்லது கரண்டிக்கு ஜாஸ்தியாக இந்தவர்ணம் இருக்கும்.

இந்த ஜந்துவின் இயற்கை வழக்கங்களில் இரண்டு விஷயங்கள் மிகவும் ஆச்சரியப்படத் தக்கவைகள்.

(1) இந்த ஜந்துவுக்கு உள்ள 10-கைகளில் இரண்டு வெகு நீண்டவைகள் என்று சொன்னேனல்லவா! இந்த இரண்டு கைகளும் மற்றக் கைகள்போலவே அனேக உருஞ்சுவாய்களை உடைத்தானவைகள். ஆனால் இவைகளுக்கு சாப்பிடுகிறதைக்காட்டிலும் அதிகமான செய்கை ஒன்று உண்டு. அதாவது தன்னினப்பெருக்கு. தன்னினப்பெருக்கு விஷயமாக இரண்டு - அதாவது, ஆண்பெண் ஜந்துக்கள் கூடிப்பிரிந்தால் அவைகளுக்குத் தங்கள் தேஹ அவயவங்களில் யாதொரு லோபமும் நேரிடுகிறதில்லை. நம் கண்ணுக்கே தெரியாத நீரிலுள்ள வெகுவெகு சிறு ஜந்துவான (amæba) அமீபா வகுப்பில் இரண்டு சேர்ந்தால் மறுபடி உடனே பிரிகிறதில்லை. இரண்டும் ஒன்றாகவே ஒருமித்து ஒரே ஜீவன்போல சற்றுகாலம் வாழ்ந்து பிறகு இரண்டாகப் பிரிகிறது உண்டு. இப்படி ஒருமித்துப் பிரிகிறதினால் இந்த ஜந்துக்களுக்கு தன்னினத்தைப் பெருகச்செய்யும் சக்தி வருகிறதென்று தெரிகிறது. அமீபாவைக்குறித்து இன்னொருதடவை சொல்லுவேன். இந்த கடல்நுரை ஜந்துவின் ஆண்பெண் கலந்தால் அமீபாவைப்போல் முழுவதிலும் இரண்டும் ஒருமித்துப்போகிறதுமில்லை. சேர்ந்ததுபோல் பிரிந்து வருகிறதுமில்லை. சேருகிறதிலும் ஒன்றுடன் ஒன்று தேஹமுழுவதும் ஒன்றுபட்டு நெருங்குகிறதில்லை. ஆணும் பெண்ணும் ஒன்றுடன் மற்றொன்று இந்த நீண்ட கைகளை நீட்டிச்சுழற்றி உருஞ்சும் உருப்புகளால் கெட்டியாகப் பிடித்துக்கொள்ளவே இந்தக் கைகள் ஒட்டிகொண்டு விடுகின்றன. பிறகு பிரிக்க சாத்தியமில்லை. ஆகையால் இவைகள் பிரியும்போது ஆணின் நீண்ட கையின் நுணியானது அறுந்துபோகிறது. இந்த பாகம் பெண்ணின் கையுடன் ஒருமித்துப்போகிறது. இந்த ஒருமித்த இடம் கொஞ்சகாலம் தரித்து பெருத்து ஒரு கோவைப்பழம் போலாகிறது. இப்படி ஆகும் தருணத்தில் அந்தச் சிறு தலையணைபோன்ற விக்கத்தினுள் கர்ப்பம் முற்றி முட்டைகள் நிரம்பி விடுகின்றன. பிறகு பெண்ணும் இந்தத் தன் கைநுனியை நழுவவிடுகிறது. நழுவவிடப்பட்ட கர்ப்பம் கடலில் மிதந்துபோய்க் கொண்டு வெடித்து தன்னுள்ளுள்ள சிற்றினங்களை வெளிப்படுத்துகின்றது.

(2) இதுதவிர மற்றொரு வெகு விநோதமான வாடிக்கை இந்த ஜந்துவினிடமுள்ளது. கடலில் வாழும் ஸகல ஜந்துக்களுக்கும் வைரிகளுள்ளன. ஒன்றை ஒன்று தின்று பசிதீர்த்தே காலம் தள்ளவேண்டியிருக்கிறதல்லாது நிலத்தில் நாய், பூனை, கிளி முதலியவைகளுக்கு நாமிடுவதுபோல் மீனுக்கும் நண்டுக்கும் கூப்பிட்டிடுகிறவர்கள் யார்?

தன்னை எந்த சமயத்தில் தன் விரோதி பிடித்து விழுங்கிவிடுமோ என்று ஸதா பயமுள்ள இந்த நீர்ஜந்துக்கள் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள எத்தனையோ சாதன ஏற்பாடுகளுடன் அமைந்திருக்கின்றன. இந்த ஏற்பாடுகளுள் கடல்நுரை-ஜந்துவிற்கமைந்துள்ள ஏற்பாடானது வெகுயுக்தியுடனுள்ளதாக இருக்கிறது. இதினுடம்பிலுள்ள பையைக்குறித்து முன்னமே சொன்னேன். இதில் கறுப்பானமை ஒன்று இருக்கிறதல்லவா! கடல்நுரை ஜந்து தன் வைரி ஸமீபத்தில் வருகிறதா இல்லையாவென்று பார்த்தறிந்துகொள்ள நேர்த்தியான கண்கள் இரண்டுள்ளதாகையால் ஸாதாரணமாக வைரியைக்கண்டு ஓடிப்போகிறது சுலபமே. ஒருக்கால் தன்னை அறியாமல் வைரி சமீபித்துவிட்டால் உடனே இந்தஜந்து தன் பையிலிருக்கும் மையை வெளியில் தன் வைரி இருக்கும் பக்கமாகப் பீச்சிவிடுகிறது. இந்த மை தண்ணீரில் கலந்து தன்னைச்சுற்றி ஒரு பெரிய மேகம் கவர்ந்துகொண்டதுபோல் இந்த ஜந்துவை மறைத்துவிடுகிறது. இந்த மறைவால் காப்பாற்றப்பட்ட கடல்நுரை-ஜந்து உடனே கடலில் ஓடி யொளிந்துவிடுகிறது.

சென்னையிலுள்ளவர்கள் கடற்கரையில் மீன் பிடிக்கிறவர்களிடம் சொன்னால் சுலபமாக இந்த ஜந்துவைத் தருவித்து நேரில் பார்க்கலாம். மற்றும் கடற்கரை யூர்களில் உள்ளவர்களும் நேரில் பார்க்கலாம். நேரில் பார்த்தால், ஐயோ! இதுவரையில் இந்த விநோதமான ஜந்துவைப் பார்க்கவில்லையே என்று வருத்தப்படுவீர்கள்.

# THE STREET OF BY-AND-BYE.

(ADAPTED)

## 'பின் செய்வோம்' என்னும் பேதை நெறி.'

நேரிசை வெண்பா.

1. பின்செய்வோம் என்னுமொரு பேதைநெறிக் கேகாதீர்!
என்செய்யும் என்பதனை எண்ணிடுவீர் ;—பொன்செய்பூண்
மைந்தர்காள், ஆங்கணடி வைத்தார்க்கு மற்றில்லைச்
சிந்தையுறு சீர்நிலைக்கட் சேர்வு.

ஏகாதீர் = போகாதீர்கள், ஆங்கண் = அவ்விடம், சீர்நிலை = உயர்ந்தநிலைமை.

2. கூடிக் கெடுக்கும் குணமுடையார் கொள்கைபோல்,
வேடிக்கை யாவிருக்கும் மேவுநெறி;—நாடியதில்
மெள்ளவரு தென்றற்கால் மெய்குளிர வீசுகினும்,
கள்ளமுடைத் தென்றகன்மின் கண்டு.

கொள்கை = குணம், தென்றற்கால் = தென்றற்காற்று, அகல்மின் = விலகுங்கள்.

3. எத்தனைபேர் யான்காண ஏதத்தின் நீங்கி அறம்
உய்த்தநெறி செல்ல உகந்தபேர்!—புத்தி
வகைமோசம் ஆக மடியின்வலைப் பட்டுத்
தகைவுண் டதிற்கிடந்தார் தாம்!

ஏதம் = தீயொழுக்கம், அறம் உய்த்தநெறி = நல்லொழுக்கம்.
உகந்தபேர் = விரும்பினபேர், மடி = சோம்பல், தகைவுண்டு = தளர்ந்து.

4. கல்விமுக டேறிக் கடக்கக் கருதினனால்,
ஒல்வகையால் ஓர் சிறுவன் ஊக்கமொடும்;—செல்வனவன்
புந்தியொளி ஒல்கிப் புரிந்ததனைச் சாராதென்?
அந்தநெறிக் கண்ணிருந்தான் ஆங்கு!

ஒல்வகை = பொருந்தும்வகை, ஒல்கி = குறைந்து, புரிந்தது = விரும்பியது.

5. எண்ணினான் ஓர்வணிகன் "எண்ணியவா றென் கருமம்
நண்ணுதலால் நன்னிதியம் நல்கூர்ந்தோர்—உண்ணச்
சொரிந்திடுவேன்." என்னத்; துயர்துடையா தந்தோ!
இருந்தனனே அந்நெறிக்கண் எய்த்து.

6. "அந்தோ! நின் தம்பி அயர்ந்தான் அவன்பிழையைச்
சிந்தியேல், மன்னி" எனச்செப்பினேன்—"இந்தாநான்
மன்னிப்பேன் மாயும்முன்." என்றான் மடிர்திட்டான்,
அந்நெறிக்கட் டீராமுன் ஆங்கு!

7. வீணேநாள் எல்லாம் விழலுக் கிறைத்தயர்ந்த
மாணாதான் தன்மனத்தை வாங்கிப்பின்—சேணார்
பரநெறியில் நன்றா பதிக்க நினைந்தும்
ஒருவிலனே அந்நெறிக்கண் உற்று.

விழலுக்கிறைத்தல் = பயனில்லாமற் போக்குதல், மாணாதான் = பெருமையில்லாதவன்,
ஒருவிலன் = நீங்கினானில்லை.

8. கண்டீரோ மைந்தர்காள்! காட்டும் இவர்க் குற்றகதி,
கொண்டீர்நீர் அந்நெறியின் குத்திரத்தை,—அண்டாது
தப்புவீர் மூப்புவந்து சாருமுன், சார்ந்தக்கால்
எப்பொழுதும் உய்விலையே ஈங்கு.

குத்திரம் = வஞ்சனை, உய்வு = பிழைப்பு.

## BIOGRAPHICAL SKETCHES. III.
## MEERABAI THE DEVOUT RANI OF CHITOOR.
## சரித்திரமஞ்சரி—3.

### மிராபாய் என்னும் புண்ணியவதியின் சரித்திரம்.

‘பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தார்.’—குறள்.

II.

மிராபாய் ஆரத்தைக்கொண்டதும் மாறுருக்கொண்ட ஆக்பரை நோக்கி உலகவின்பத்தைத் துறந்து சந்நியாசம் பூண்ட உம்மிடத்தில் இவ்வளவு விலை பெற்ற மாணிக்கமாலை வந்தவகையென்னவென்று வியந்து கேட்டாள். அதற்குத் துறவிவேஷம் பூண்டோன், யான் யமுனாநதிதீரத்தில் ஸ்நானஞ் செய்துகொண்டிருக்கும்போது ஆற்றினின்றும் அதைக்கண்டெடுத்தேன்; அதை நினதன்பிற்கு உரித்தாகிய கடவுளுக்கு அணிவித்தலன்றி வேறோர் நல்வழியில் உபயோகிக்க வகையறியாததால் நின்பால் கொணர்ந்து கொடுத்தேனென்று விடையளித்தனன். அது கேட்டு மிராவும் அவனிடம் விளங்கிய அன்பிற்காக வெகுவாய்ப்புகழ்ந்து மெச்சினாள். பிற்பாடு சக்கிரவர்த்தியும் அவன் பாடகனும், அவர்கள் மாறு கோலத்தை யாவரும் அறிந்துகொள்ளாமலே வெளியேறி டில்லி நகரம் வந்து சேர்ந்தார்கள்.

விலைபெற்ற அம்மாணிக்கமாலை மிராவுக்குக் கொடுக்கப்பட்ட சமாசாரம் ஊரடங்கலும் பரவிற்று. மிராவின் கணவனாகிய அரசன் அம்மாலையைப் பார்க்கவேண்டுமென்று சொன்னபடியால் அது அவனிடம் கொண்டுவரப்பட்டது. அரண்மனை இரத்தினப் பரீக்ஷைக் காரர்களைக்கொண்டு அதைச் சோதித்ததில், அது பத்து லக்ஷ ரூபாய் பெறுமானதென்று அவர்கள் சொன்னதோடு, அவர்களிலொருவன் "இது ஆக்பர் பாதுஷாவுக்கு கொஞ்சகாலத்திற்குமுன்னர் விற்ற மாலையைப் போன்றிருக்கிற"தென்று சொன்னான். ஒருக்கால் சக்கிரவர்த்தியே கோவிலிற்கு வந்துபோயிருக்கக் கூடுமென்று அரசன் ஐயமுற்று, அவ்வாறு வந்துபோனவர்களின் அங்க அடையாளங்களை விசாரித்ததில், ஆக்பரே நேரில் தன் மனைவியை வந்து பார்த்துப்போனதுமல்லாமல் அவளைத்தொட்டு இரத்தினமாலையைக் கொடுத்துப்போனதாகவும் அரசனுக்குத் தெரியவந்தது. தெரிந்தும் மிராவின் பெருமையை நன்கே யுணராத அவ்வரசன் மிகவும் சினந்து, அவள் மகம்மதிய அரசனைக் கண்டதாலும், அவன் தொட்டுக்கொடுத்த ஆரத்தை வாங்கியதாலும், அவள் சாதியிழந்தது மன்றியில் மீவார் ராஜவம்சத்திற்கே பேரவமானம் கொணர்ந்தாளென்று கடிந்து, தனது நாட்டு ஜனங்கள் என்ன அவதூறு சொல்வார்களோ வென்று பயந்து, அவ்வவமானத்தை யொழித்தற்பொருட்டு மிராவைக் கொன்றுவிடவேண்டுமென்று உத்திரவு பிறப்பித்தான். மிராபாயிக்கு மாறுவேடம்பூண்டு வந்தவன் டில்லிச் சக்கிரவர்த்தியென்று கொஞ்சமேனும் தெரியாது. தெரிந்தாலுங்கூட, அவன் உள்ளன்புடன் அவளிடம்வந்து மெய்ஞ்ஞான மார்க்கத்தைத் தனக்குப் போதிக்கவேண்டுமென்று கேட்டிருக்கும்பக்ஷத்தில்; அவளுக்குக் கொஞ்சமேனும் தடையிருந்திராது. கடவுளின் சிருஷ்டியில் அமைந்திருக்கும் மனிதர்களில் சண்டாளரேனும், பிராமணரேனும், மகம்மதியரேனும், மற்றும் யாவரேனும் அவர்களெல்

லோரும் கருணைக்கடலாகிய கடவுளின் அன்பிற்கு சமமான பாத்திரமுள்ளவர்களென்று மிராபாய் நன்குயுணர்ந்திருந்த ஞானியாதலால் அவளுக்கு யாதோர் வேற்றுமையும் தோற்றியிராது.

மகா பக்திசிரோமணியாகிய மிராபாயைக் கொன்றுவிடும்படி அரசன் பிறப்பித்த உத்தரவைச் செய்துமுடிக்க ஒருவரும் துணியவில்லை. மரண தண்டனை விதிக்கப்பட்டவர்களைத் தூக்கிலிடும் தொழிலாளர்களாகிய கிராதகக் கொலைஞர்களும் மிராவைத் தீண்டப் பின்னடைந்தனரென்றால், மற்றோர் அக்காரியம் செய்ய எப்படித் துணிவர். அவள், ஏழைகளிடத்தும் செல்வவான்களிடத்தும், பாபிகளிடத்தும், புண்ணியவான்களிடத்தும், பாலியர்களிடத்தும், வயோதிகரிடத்தும், ஒரே சமமாய் அன்பு பாராட்டி தெய்வபக்தியை யூட்டி வந்தபடியால், அவளே உலகம் உய்யும்பொருட்டு அவதரித்த உலகமாதாவென்று பல்லோரும் கொண்டாடிவந்தார்கள். இப்பேர்ப்பட்ட புண்ணியவதியை உயிர்மாய்த்திட யாவர்தான் மனங்கொள்வர். இதுகண்ட மெய்ஞ்ஞானமற்ற அவ்வரசன், அரசி தற்கொலைபுரிந்து உயிர் துறந்திடவேண்டுமென்று இரகசியமாய் மறு உத்தரவு பிறப்பித்தனன். ஒருநாள் சாயங்காலம் மிரா கோவிலினின்றும் பஜனைகள் முடித்துக்கொண்டு அரண்மனைக்குத் திரும்பி வந்தபோது, மந்திரிகளிலொருவன் மேற்குறித்த உத்தரவை இராணிவசம் கொடுத்தான். அவள் அதை முற்றிலும் படித்துப்பார்த்துவிட்டு, நான் உயிர் துறப்பதற்கு முன்னர் மகாராஜாவை ஒரு முறையேனும் பார்க்கமுடியுமோவென்று வினவ, அதற்கு மந்திரி, அது அரசன் ஆக்ஞைக்கு விரோதமென்றும், பார்க்கமுடியாதென்றும் விடைசொன்னான். அதுகேட்டு, 'நல்லது அப்படியே ஆகுக, நான் எனது பர்த்தாவின் உத்தரவின்படியே நடந்துகொள்கிறேன் என்பதை அவருக்கு அறிவி' யென்று மந்திரியிடம் சொல்லிவிட்டு, தன்னுடன் கூடவந்திருக்கும் நகரவாசிகளாகிய ஆடவர்களும் பெண்டிர்களும் இச்செய்தி யுணர்ந்தால் துக்கத்திலாழ்ந்து வருத்தமடைவார்களென்று எண்ணி, ஒருவருடனும் ஒன்றும் சொல்லாமல் அரண்மனையின் உட்புறம் சென்றாள்.

மிரா தனது இல்லம்சேர்ந்ததும் அன்றிரவு போஜனமருந்தி தன் சயனவறையுட்சென்று தூக்கம் பிடிக்காமல் வெகுநேரம் உட்கார்ந்துகொண்டிருந்தாள். நான் ஒருவருக்கும் யாதொரு தீங்கும் செய்தவளல்லவே ; எக்காலத்தும் தீய எண்ணமுங்கொண்டவளல்லவே ; என் பேரில் சாட்டப்பட்ட குற்றமும் குற்றமாகத்தோற்றவில்லையே ; துறவறவுடை தரித்துக்கடவுளிடத்தன்புகொள்ளும் மார்க்கத்தைப் புகட்டும்படி வருந்திக்கேட்டுக்கொண்ட சந்நியாசியின் மனோரதத்தை நிறைவேற்றாமல் விட்டுவிடுவது நல்லறமாகுமோ ; மெய்யன்புகொண்டு தெய்வார்ப்பணமாகக்கொடுத்த நன்கொடையை யான் கடவுளின் பொருட்டு ஏற்றுக்கொண்டதிலும் குற்றமொன்றும் காணவில்லையே ; சந்நியாசி வேடம் பூண்டவன் ஆக்பர் சக்கிரவர்த்தியென்றும், அவர் என்னைப் பரிசோதிக்க வந்தவரென்றும் யான் அறிந்திலேனல்லவோ; எது எப்படியாயினென்ன, இவைகளெல்லாம் ஊழின்பயனல்லவோ வெனப் பலவாறு யோசிக்கலானாள். எனது அன்பிற்கன்பாயிருந்த என் கணவனும் என்னை இகழத் துவக்கினார். அவரது பிரியமில்லாவிடின் எனது உயிர்வாழ்க்கை என்ன பிரயோஜனமுடையது. கணவன் அன்பிற்கு மாறுபாடாய் நடந்த நான் இருந்தென்ன போயென்ன; மேலும் மீவார் இராஜ்ஜியத்திற்கு என்னால் அவமானமுண்டாவதானால் என்னுயிரை மாய்த்து மானத்தை நிலைநிறுத்துவேன். கற்பிற்சிறந்த பெண்டிரனேகர் மானங்காத்தற் பொருட்டு உயிர்துறந்திருக்கின்றன ரல்லவோ. கணவன் பெயருக்குக் கீர்த்தியுண்டாக்குவதெனது கருமமாயிருக்க அவருக்கபக்கியாதி

யுண்டாக்கி யான் உயிர் வாழ்வதிலென்னபயனே. என்றைக்கிருந்தாலும் ஒருநாள் இக்கட்டையைக் கழித்திடவேண்டுமல்லவோ; எனது கணவனின்பொருட்டு வாழ்ந்திருந்த நான் அவரன்பை யிழந்தால் இனியொருக்கணமும் உயிரைவைத்திருக்க மனம் பெறேன். மேலும்,

'புன்புலா னரம் பென்புடைப் பொய்யுட
லன்பர் யார்க்குமருவருப்பல்லவோ
வென் பொலாமணியே யிறையே யித்தாற்
றுன்பமன்றிற் சுகமொன்று மில்லையே.'

இவ்வாறு மிரா பலவிதமும் யோசித்து, கடைசியாய் 'பாராதிதனிலுள்ள செயலெலா முடிவிலே பார்க்கினின் செயலல்லவோ' வென்றும்,

. . . . அகில மீதென்னையாட்டி
யாட்ல் கண்டவனுநீ யாடுகின்றவனுநீ யருளுநீ மௌன ஞான
தாதாவுநீ பெற்றதாய்தந்தை தாரமுநீ தமருநீ யாவுநீகாண்.

என்று கடவுளைத்துதித்து, மெய்ஞ்ஞானவுணர்ச்சி கொண்டு, மரணதண்டனையை ஒரு பொருட்டாயெண்ணாமல் தேறுதலடைந்து சாந்தமடைந்தாள். அன்றிரவு நடு நிசிவேளையில் யாவரும் நன்றுயயர்ந்து நித்திரைசெய்து கொண்டிருக்கும்பொழுது மிரா எழுந்திருந்து, ஒரு சாமானிய ஆடைதரித்து, அவளுக்குப் பிரீதியாயிருக்கும் எல்லாவற்றிலும் பற்றையொழித்து அரண்மனையை விட்டுப் புறம்போந்து ஒரு நதிக்கரையை வந்தடைந்தாள்.

அவள், கரையின்பேரில் நின்றுகொண்டு "பொய்யுடலை நிலையன்றெனப், போதநெறி தந்ததுஞ் சாசுவதவானந்தபோகமே வீடென்னவே, நீராளமாயுருக வுள்ளன்புதந்து நின்ன தருளின்னு மின்னு, நின்னையே துணையென்ற வென்னை"க்காற்றுப் பேரின்பவீட்டை யளிப்பாயென்று கடவுளைத் துதித்துப் பின்னர் அலைகளடித்துப் புரண்டோடும் ஆற்று வெள்ளத்தில் அரசன் உத்தரவின்படி செய்து முடிக்கத் திடீரெனப்பாய்ந்து விழுந்தாள். பாய்ந்ததும் அவளுக்கு என்ன நேர்ந்ததென்று அவள் அறியவில்லை. அவள் உடம்பு ஆற்று நீர்ப்பெருக்கால் வெகுதூரம்வரையில் அடித்துக்கொண்டு போகப்பட்டு, நதியின் தாழ்ந்திருந்தவொரு கரைப்பக்கத்தில் ஒதுக்கப்பட்டது. இம்மாதிரி அவள் வெகுநேரம் கிடக்கையில் யாதோ வொரு திவ்விய தேஜோமயமுள்ள மகாபுருஷன் தன் முன் தோன்றி அருள் நோக்கமும், புன்சிரிப்புமுலாவிய வதனத்துடன் 'ஓ பெண்மணியாகிய மிராவே, நீ உன் கணவன் ஆக்ஞைப்படி நடக்க உன் உயிரை மாய்த்துக்கொண்டாய்; ஆயினும் நீ உலகத்தார் உய்யும் பொருட்டுச் செய்யவேண்டிய காரியம் பாக்கி யுளது; மனிதர்களின் துக்கத்தை யொழித்து மெய்ஞ்ஞான சுகத்தைக்கொடுப்பதாகிய கடவுள் பக்தியை நீ ஜனங்களுக்குள் பரவச்செய்து அவர்களுக்குச் சன்மார்க்க நெறியைப் போதிக்கக் கடவை; அதற்காக நீ உடனே புறப்படவேண்டும்,' என்று இவ்வாறு சொன்னதாக வொரு காட்சியைக் கனவிற் கண்டாள். அவள் உடனே திடுக்கிட்டெழவும், தான் தன்னுடைய ஊருக்கப்பால் வெகுதூரத்தில் ஆற்றுவெள்ளத்தால் ஒதுக்கப்பட்டுக் கிடப்பதையுணர்ந்தாள். கண்ட கனவை அவள் நினைத்து, 'என்பெலாம் நெக்குடைய ரோமஞ் சிலிர்ப்ப வுடலிளகமனது அழலின்மெழுகாயிடையறாதுருக வருமழைபோலிரங்கிய இருவிழிகணீரிறைப்பக்' கடவுளைப் பலவாறு தியானித்து மெய்யன்பினால் மூர்ச்சையானாள். மூர்ச்சை தெளிந்ததும், அவள் உடம்பு தண்ணீரில் அலைகளாலடிபட்டு அதிகமாய் நொந்திருந்தாலும், அவள் விழித்தெழுந்தபோது பொழுதேறியிருந்தபடியால் வெயிலின் தீட்சண்யம் அதிக கொடுமையாயிருந்தபடியாலும், அவள் தண்ணீரிலிருந்து எடுத்துக் கரையில் போடப்பட்ட மீன்போலவும், வெயிலில் போடப்பட்ட மாலைபோலவும் வாடி வதங்கி துர்ப்பலமாயிருந்தாள். நதிக்கு இருபுறமுமிருந்த நிலம் கரடு முரடாயும் களர் மண்ணுள்ளதாகவுமிருந்தபடியால் செடி கொடி மரங்கள் யாதொன்றுமில்லாமல் வெயிலின் தாபம் அதிகமாகவிருந்தது. அக்காட்டில் கண்களுக்கெட்டியதூரம் வரையில் ஜீவஜெந்துக்களே அவளுக்குத் தென்படவில்லை.

ஏகவெங்கன லரசிருந்த காட்டினிற்
காகமுங்கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங்கனலெனும் வடவைத்தீச்சுட
மேகமுங்கரிந்திடை வீழ்ந்த போலுமே.

சற்றே களைப்பாறியபிற்பாடு மிரா வெப்பத்தால் அப்பொட்டல் நிலத்தின் வழியாய்ச் செல்லமாட்டாமல் ஆற்றோரமாகவே தத்தித் தள்ளாடி நெடுந்தூரம் நடந்து, அங்கோர் ஆயர்பாடியுட்சென்று, அங்குள்ளோர் கொடுத்த பாலையருந்தி கொஞ்சம் திடங்கொண்டு, 'வடமதுரை'க்கு (Mathura)* அருகாமையிலிருக்கும் 'பிருந்தாவனம்' என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தை நாடி, கடவுளின் நாம சங்கீர்த்தனங்களைப்பாடிக்கொண்டே வழிநடந்தனள். இவ்வாறு இவள் சென்ற கிராமங்களிலும், பட்டினங்களிலும், தெருக்களில் விளையாடிக் கொண்டிருக்கும் பிள்ளைகள் விளையாடுதலை யொழித்து, அந்தந்த ஊர் எல்லை வரையிலும் அவளைப்பின்பற்றிச்சென்று அவள் சொல்லும் கடவுளின் திருநாமங்களைத் தாங்களும் சொல்லி அவளுடன் ஆனந்தக் கூத்தாடுவார்கள். அவரவர்கள் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும் ஆண்களும் பெண்களுமாகிய ஜனங்கள் வேலைகளை நிறுத்திவிட்டு மிராவைத் தரிசிக்கவும், அவளது இனிய பஜனையைக் கேட்கவும் கும்பல் கும்பலாய் வருவார்கள். தெய்வபக்தியில் முதிர்ந்த சிலர் அவளுடன் சேர்ந்து பஜனை செய்துகொண்டே பிருந்தாவன யாத்திரைப் போகப் புறப்பட்டனர். அவள் சென்ற ஊர்கள் தோறும் ஜனங்கள் அவளுக்கு ஏராளமாய் ஆடைகளும், பணங்காசுகளும், உண்பதற்கு இனிய பலவித உண்டிகளும் கொண்டு வந்து கொடுத்தார்கள். ஆனால் அவர்களின் அன்பிற்காக வந்தனமளித்ததைத் தவிர, அவள் அவைகள் யாதொன்றையும் ஏற்றுக்கொண்டவளல்லள். பசித்தபோது கொஞ்சம் பால் சாப்பிடுவதைத்தவிர அவள் வேறுவிதமான உணவைப் புசித்ததில்லை. இவள் பிருந்தாவனம் வந்து சேர்ந்தபோது கிராமங்கள் தோறுமிருந்து இவளைப் பின்பற்றிச்சென்ற ஜனங்கள் ஆயிரக்கணக்கானோர்கள். பிர்ம்மதேஜஸ் மிகவும் விளங்கிய இவள் வதனத்தைப் பார்த்தவர்களும், பிர்ம்மதத்துவார்த்தங்களை யுணர்த்துவதாகிய பாடல்களை வெகு உருக்கத்துடன் அன்பு மிகுந்த இவள் பாடுவதைக் கேட்டவர்களும், ஜனங்கள் திரள்திரளாய் இவளுடன் பஜனைகள் செய்துகொண்டு தொடர்ந்துசென்ற காட்சிகளைக் கண்டவர்களும், கடவுள்தான் பெண்ணுருக்கொண்டு மானிடருக்கு முக்தியளிப்பதாகிய பேரின்பமார்க்கத்தைப் புகட்ட வந்தனரோவென்று வியந்தனர்.

'நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.'

(நீதியையுந் தருமத்தையும் விரும்பிய பயனுடையவர் குணத்தை உலகத்தார் புகழ்வர்.)

மிராபாய் பிருந்தாவனம் வந்து சேர்ந்த சங்கதி நாடெங்கும் பரவியது. அவள் பாடிய பாடல்களும் நாட்டுப்புறங்களிலும் பட்டினங்களிலும், அரசர் அரண்மனைகளிலும் புலையர் பாடிகளிலும், சிறியோராலும் பெரியோராலும், ஆண்களாலும் பெண்களாலும், பஜனை ரூபமாகப் பாடப்பட்டன. சித்தூர் நகரிலிருந்து மிரா காணாமற்போனது முதற்கொண்டு அந்நகரத்து ஜனங்களெல்லோரும் அவளுக்கு யாது துயர் நேர்ந்ததோவென்று அதிக வருத்தமுற்றிருந்தார்கள். அரசன் மிரா தற்கொலை புரிந்துகொள்ளவேண்டுமென்று 'இரகசிய உத்தரவு' பிறப்பித்திருந்ததால் அவ்வூர் ஜனங்களுக்கு அவ்விஷயம் யாதொன்றும் தெரியாது. ஆகவே, அவள் பிருந்தாவனத்திலிருப்பதைச் சித்தூர் ஜனங்கள் அறிந்ததும், அவளை முன்னரே பார்த்திருந்தவனேகரும், அவளுடைய தெய்வபக்திவிசேஷத்தை இப்போது கேள்வியுற்ற மற்றோரனேகருமாக பிருந்தாவனத்திற்கு யாத்திரையாகப் புறப்பட்டு அவளை தரிசித்து வரப்போனார்கள். மீவார் தேசத்து மகாராணியாயிருந்த மிராபாய் இப்போது ஏழைப் பரதேசியாயிருந்தபோதிலும், ஜனங்களுக்கு அவள் இராணியாயிருந்தபோது இருந்ததைக் காட்டிலும் பதினாயிரமடங்கு அன்பு மேலாகவே யிருந்தது. மானிடரிடத்தில் கருணைகொண்டு அவர்கள் கடைத்தேறுவதற்கான மார்க்கத்தைக் காட்டவல்ல அருட்குணமுடையோர், உயர்குடிப் பிறந்தோரேனும், கடையரேனும், ஆணேனும், பெண்ணேனும், யாதோர் வேற்றுமையுமின்றி அவர்கள் யாவராலும் பூஷிக்கப்படுவார்களென்பதற்கு ஐயமுண்டோ!

'நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினு மஃதே துணை.'

* Now known as *Muttra*.

## PRIDE GOETH BEFORE FALL.
## "அகம்பாவம் பொல்லாது."



ஒருநாள் ஒரு ஊரிலிருந்து பத்துப்பெயர்கள் வந்தார்கள். அயலூரில் வியபாரம் செய்துவிட்டுத் தங்களுக்குத் திரும்பி வரும்போது வழியில் மூன்று கள்ளர்கள் வந்து மறைத்துக்கொண்டார்கள். திருடர்கள் கையில் ஆயுதமிருந்தமையால் இந்தப் பத்து பெயர்களும் அவர்களை எதிர்க்கக்கூடாமல் போய்விட்டது. திருடர்கள் வியாபாரிகளைப் பார்த்து அவர்கள் கையிலிருந்த எல்லாவற்றையும் பிடிங்கிக்கொண்டு, குண்டித் துணியைக் கூடவிடாமல் அவிழ்த்தெடுத்துக்கொண்டு, இந்தப்பத்து வியாபாரிகளையும் எதிரில் கோவணத்துடன் நிறுத்தி "அடா நீங்கள் எல்லாரும் நடனஞ்செய்யுங்கள் பார்ப்போம்" என்றூர்கள். இந்த வியாபாரிகள் பார்த்து "இந்தத் திருடர்கள் நம் சொத்தை எல்லாம் குண்டித்துணிவிடாமல் பிடிங்கிக்கொண்டு நம்மை இப்பொழுது ஆடச்சொல்லுகிறூர்கள். இதுவும் நமக்கு வந்த பொல்லாதகாலம்" என்று வருத்தப்பட்டவர்களாய் ஆட ஆரயபித்தார்கள். இவர்களில் ஒருவன் வெகு புத்திசாலி. அவன் தான் நடனம் பண்ணுவதற்குச் சாதகமாக ஒரு பாட்டை எடுத்துக்கொண்டு பாடினன். அதாவது :—

"நாமனும் புலிப்பேர்
தாளனும் திருப்பேர்
சாவன்னு தாளனை
திருவணத் தாளன்சுற்றினல்
சாவன்னுத் தாளன் மீதி!
தா, தை, தோம், ததிங்கண!"

இந்த மாதிரியாய்ப் பாடி சுற்றிச் சுற்றி நடனம் செய்தார்கள் இந்தப் பாட்டின் அருத்தம் வியாபாரிகளுக்குமட்டும் தெரியுமேயல்லாதுமற்றவர்களுக்குத் தெரியவேமாட்டது. வியபாரிகளுக்குள் எண்ணிக்கைகளுக்குச் சங்கேதம் உண்டு. முக்கியமாய் நம்முடைய பாட்டுக்கு வேண்டிய சங்கேதங்கள்: சா என்றுல் ஒன்று, திரு என்றுல் மூன்று, புலி என்றுல் பத்து. இந்தப் புத்திசாலி பாடின பாட்டின் அருத்தம். "நாமனும் புலிப்பேர்"—நாமோ பத்துபெயர்கள்; "தாளனும் திருப்பேர்"—திருடனும் மூன்று ஆசாமிகள். 'முண்டனுக்கு இரண்டாள்' என்பது பழமொழி. அதற்குப் பதிலாக "சாவன்னு தாளனை திருவணத்தாளன் சுற்றினல்" என்றுல் ஒரு திருடனுக்கு மூன்றுபெயர்களாய்ப் புகுந்து பிடித்துக்கொண்டால் "சாவன்னுத் தாளன் மீதி"—நம்மில், மூன்று திருடர்களுக்கும் மும்மூன்று ஒன்பதுபேர்போக பாக்கி ஒருவனிருக்கின்றுன். அவன் இவர்கள் கால்கைகளைத் துணியால் கட்டிவிட்டால் நாம் நம்முடைய சொத்தை எடுத்துக்கொண்டு ஓடிவிடலாம் என்று கருத்துள்ள பாட்டைப் பாடி நடனம் செய்துகொண்டே வந்து "தா, தை, தோய், ததிங்கண" என்னும் போது ஒவ்வொரு திருடன்பேரிலும் மும்மூன்று வியாபாரிகளாகப் பாய்ந்து பிடித்துக்கொண்டார்கள். அதற்குள் மிகுந்தவன் துணிகளைக் கிழித்து இவர்கள் கைகால்களைக் கட்டி உருட்டினன். இவர்கள் அசையாமற் கட்டுண்டபிறகு "விழுந்திருங்கள்" "அகம்பாவம் பொல்லாது" என்று மூன்று திருடர்களையும் கட்டி உருட்டிவிட்டு பத்துவர்த்தகர்களும் தங்கள் தங்கள் சொத்தை எடுத்துக்கொண்டு வீடுவந்துசேர்ந்தார்கள். திருடர்கள் முதலில் தங்கள் காரியமாயும் அகம்பாவத்தால் கெட்டார்கள். ஆகையால் அகம்பாவம் யாவருக்கும் கூடாதென்பது இச்சிறு கதையின் கருத்தாம்.

## MAHABALIPURAM—I.

### 'மஹாபலிபுரம்' என்று வழங்கும் மாமல்லபுரம்.

மஹாபலிபுரம் என்னும் ஊரானது சென்னைக்குத் தெற்கே 32-மைமயில் தூரத்தில் செங்கற்பட்டு ஜில்லாவில் கோவளம், சதுரங்கப்பட்டணம் இவைகளுக்கு மத்தியில் கடற்கரையிலிருக்கிறது. நமது தென்னிந்தியாவில் நாணயத்திற்கும் ஆச்சரியத்திற்கும் பெயர்பெற்ற சிற்பவேலைகள் எவ்விடமிருக்கின்றனவென்றால் மஹாபலிபுரத்தில்தான். இந்தக்காரணத்திற்காகவே அநேக வெள்ளைக்காரர்கள் ஒவ்வொரு விடுமுறைதோறும் மஹாபலிபுரம் போய்ப் பார்த்துவருவது வழக்கம். அன்றியும் மஹாபலிபுரத்தைப்பற்றியும் அவ்விடத்திய சிற்பத்தைப்பற்றியும் அநேக புஸ்தகங்ளில் அவர்கள் எழுதியிருக்கிறார்கள். நம்மவர்களில் அநேகர் மகாபலிபுரத்தைப் பார்த்தேயிருக்கமாட்டார்கள். செங்கற்பட்டில் அல்லது சென்னையிலிருக்கும் சிலர் மாத்திரம் இந்த ஊரைக்கண்டுகளிக்கும் பாக்கியம் பெற்றிருக்கக்கூடும். அங்கேயுள்ள அபூர்வக்காக்ஷியை எல்லோரும் போய்ப்பார்த்து வியப்பை அடையும்பொருட்டு நாமிந்த சஞ்சிகையில் இந்த ஊரைப்பற்றி எழுத முயலுகிறோம்.

முதல்முதலில் மஹாபலிபுரம் என்ற பெயரைப்பற்றி சற்று விசாரிப்போம். இந்த ஊரில் மகாபலிசக்கிரவர்த்தி யாண்டதாகவும் அதன் நிமித்தம் இந்த ஊருக்கு 'மகாபலிபுரம்' என்று பெயர்வந்ததாகவும் சிலர் சொல்லுவார்கள். மகாபலிசக்கிரவர்த்தி கதை எல்லாருக்கும் தெரிந்தவிஷயமாகையாலதை நாமிங்குஎடுத்துக் கூறுவது அனவசியம். ஆனால் இந்த ஊரிலிருக்கும் சாஸனங்களில் ஒன்றாவது மகாபலிசக்கிரவர்த்தியைப்பற்றிச் சொல்லாததினால் மகாபலிபுரமென்று இந்த ஊருக்கு வந்த பெயரானது காரணமின்றி ஜனங்களால் சப்தானுஸாரியாய் கொடுக்கப்பட்டதாக ஊகிக்கவேண்டியிருக்கிறது. 'மகாபலிபுரம்' என்பது எந்தசப்தத்தை அனுசரித்து வந்தது? ஆனால் இந்த ஊரின் சரியான பெயர் என்ன? என்றுகேள்விகள் பிறக்கலாம். சாஸனங்களாலும் சரித்திரத்தாலுமிந்த ஊரின்பெயர் 'மாமல்லபுரம்' என்று ஏற்படுகிறது. மல்லான் என்பது பல்லவ வம்சத்து அரசர்களின் பட்டப்பெயர். இவர்கள் சோழ அரசர்களுக்கு முந்தி தொண்டமண்டலத்திலாண்டுவந்தவர்கள். 'மா' என்றால் 'பெருமை பொருந்திய' என்பது எல்லாருக்கும் தெரிந்த அருத்தம். 'பெருமை தங்கிய மல்லவர்களுடைய பட்டணம்' என்பது இதன்பொருளாகும். இந்தச் சிறு ஊர் பழைய காலத்திலிருந்தபடியாலிதற்கு 'மாமல்லபுரம்' என்று பேருண்டாயிற்று. மாமல்லபுரம் என்ற சப்தங்களுக்கு பிற்காலத்தில் அதிலடங்கிய சரித்திரம் தெரியாமற்போகவே அங்கிருந்த ஜனங்களுக்கு அருத்தம் விளங்கவில்லை. அந்த சப்தங்களை ஒருவாறு மாற்றி மகாபலிபுரம் என்று வைத்துவிட்டார்கள். இந்த 2-பெயர்களுடனும் இன்னமொருபெயர் இந்த ஊருக்கு உண்டு. அதாவது 'Seven pagodas'—ஏழு கோவிற்கள். இந்தப் பெயர் பார்க்கும்பொழுதே இங்கிலீஷ்காரர்களிடமிருந்து உண்டானதாகத் தெரிகிறது. 100,—150-வருஷங்களுக்கு முன் இந்த ஊருக்குச் சமீபத்தில் கப்பல்கள் போகும்போது மாலுமிகள் கரையோரம் 7-கோவில்கள் தங்களுக்கு தோற்றினபடியால் இந்த இடத்திற்குத் "Seven Pagodas" "ஏழு கோவிற்கள்" என்று பெயரிட்டார்கள். இதை ஒரு நிச்சயமாய் வைத்துக்கொண்டு முதல் முதலில் இவ்விடத்தில் 7-கோவிற்களிருந்ததாகவும் அவைகளில் 6-சமுத்திரத்தில் முழுகிப்போயின என்றும் இப்போது ஒன்றுதான் கரையோரம் இருக்கின்றதென்றும்

ஜனங்கள் சொல்லுகிறார்கள். இது சுத்தப் பிசகு. ஏனெனில் இப்போது மாலுமிகள் மாமல்லபுரம் சமுத்திரத்தின் வழியாகப் போகும் போது கரையோரமிருக்கிற இந்த ஒரு கோவிலைக்கூடக் கண்டுபிடிப்பது முடியாதகாரியம். ஏனெனில் அது வெகு தாழ்ந்திருக்கிறது. ஆனால் உயர்ந்த குன்றுகளையும் அக்குன்றின் சிகரங்களையும் தூர இருந்து பார்க்கலாம். அவைகள் 7-உருவங்களாகக் காணப்படுகிறபடியால் இந்த ஊருக்கு Seven Pagodas என்று அவர்கள் பெயரிட்டுவிட்டார்கள். குன்றின் சிகரத்தில் எப்போதும் ஹிந்துக்கள் கோவில்கட்டியிருக்கிறார்கள் என்பது அவர்களினபிப்பிராயம். அப்படி அவர்களிட்ட பெயர் நாளது வரையில் வழங்கியும் வருகிறது. ஆகையாலிந்த ஊருக்கு மூன்று முக்கியப்பெயர்கள் உண்டு:— மகாபலிபுரம், மாமல்லபுரம், ஏழு கோவிற்கள். இவற்றுள் மாமல்லபுரம் என்பதுதான் சரியான பெயர்.

இந்தப் பெயருக்குத்தகுந்தபடி இது முற்காலத்தில் ஒரு பெரிய பல்லவ பட்டணமாயிருந்தது. தற்காலத்தில் பல்லவர்களுடைய விசித்திரமான சிற்ப சாஸ்திரவேலைகளைப் பார்க்கவேண்டுமென்றால் மாமல்லபுரம்போனால்தான் தெரியும். இந்தப் பட்டணமானது (இப்பொழுது சிறு கிராமம்,) சமுத்திரக்கரையிலிருக்கிறது. பட்டணமிருந்து 'பாப்பாஞ்சாவடி' யிற் போய் படகேறினால் ஒரு ராத்திரியில் போகலாம். அல்லது சாயந்திரம் தென்னிந்தியா ரயிலேறி செங்கற்பட்டிலிறங்கி திருக்கழுக்குன்றம் மார்க்கமாய் ஒரு ராத்திரியில் மாமல்லபுரம்போய்ச் சேரலாம். தூரத்திலிருந்து பார்க்கும்போது குப்பல் குப்பலாய் சில கற்கள் கண்ணுக்குத் தென்படும். இந்த இடத்திலும் ஆச்சரியமிருக்கிறதா என்று ஜனங்கள் சந்தேகிக்கக்கூடும். குன்றுகளைக் கடந்து ஊருக்குள்வந்து அவைகளின் முன் நின்றுவிட்டால் நேத்திரங்களுக்கு உண்டாகுமானந்தத்திற்கு அளவேயில்லை. அநேக விசித்திரவேலைகள் நாலுபக்கங்களிலும் கண்ணைக்கவரும்போது 'இதுஎன்ன அற்புதக் காக்ஷி, கதைகளில் வர்ணிக்கப்பட்டிருக்கிற இந்திரலோகக்காக்ஷியா, இது என்ன! வென்று சந்தேகிக்கும்படி தோன்றும். இவ்விடத்திய சிற்பவேலைகளின் அற்புதமென்னவென்றால் அநேகமாய் எல்லாம் ஒரேகல்லில் குடைந்தெடுத்தவேலை. இவ்வேலையை அங்கிலேய சிற்பசாஸ்திரிகள் "Monolithic caves"—ஒரு கல்லில் செதுக்கப்பட்ட குகைகள் என்பார்கள். இது தான் இங்கு வெகுவிசேஷம். மாமல்லபுரத்தைத் தவிர வேறு ஒரு இடத்திலும் தென்னிந்தியாவில் ஒரே கல்லில் செதுக்கப்பட்ட குகைகளும் கட்டடங்களும் கிடையவே கிடையா. பம்பாய்க்கு சமீபத்தில் 'எலிபான்டா' (Elephanta) என்னும் குகைகளும் தக்காணதேசத்தில் 'எல்லோரா' (Ellora) என்னும் இடங்களும் மாமல்லபுரத்தைப்போல் ஒரு கல்லில் செதுக்கப்பட்ட குகைகளையுடையவைகள். ஆகையால்தான் இந்த ஊருக்கு இவ்வளவு மகிமை வந்தது. ஒவ்வொரு வேலையும் சிற்ப சாஸ்திரத்தை அனுசரித்து ஒருவித பழுதுமில்லாமல் கடைசல் பிடித்தாற்போல் தோன்றும்.

முதல் முதலில் மாமல்லபுரத்தில் நமது கண்ணுக்குத்தென்படுவது 90-அடி நீளமும் 30-அடி உயரமுமான ஒரு பெரும்பாறை. இதற்குப்பெயர் 'அர்ச்சுனன் தபசு' என்று சொல்வார்கள். நாம் இதை முதலில் வரைவோம். இது அதிவிசித்திரமானவேலை. இது ஒரு பாறை என்று முன்னமேசொன்னோமே; இதில் 150-200 உருவங்கள், மனுஷன், மிருகம், பக்ஷி, இவை இந்த லோகத்தில் எத்தனை வகைகளுண்டோ அத்தனையும் தன் தன் வடிவத்தில் மேலெடுத்துக்காட்டி கொத்தப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றும் அழகின் அவதாரமாகத் தென்படுமேயல்லாது அற்பஸ்வற்பமாகக் காணாது. நல்லது, இத்தனை உருவங்களை மேலெடுத்துக்காட்டிக் கொத்திய சிற்பசாஸ்திரிகள் எவ்வளவு கைதேர்ந்தவேலைக்காரர்களாக இருக்கவேணும். ஒரேகல்லில் 150—200 பிம்பங்கள் வேலைசெய்யப்பட்டிருக்கின்

றன. ஒரு பிம்பம் ஊனப்பட்டால் எல்லாம் போயிற்றே; அப்படி வராது என்கிற தைரியமிவர்களுக்கு இருக்க எத்தனை கைப்பழக்கமும் தேர்ச்சியுமிவர்களடைந்திருக்க வேண்டும். ஒவ்வொன்றையும் பார்த்தால் உயிர் ஒன்றொழிய அதேபாவனையாயிருக்குமே யல்லாது வேறு வித்தியாசம் கொஞ்சங்கூட இராது. இந்த வேலைக்கு 'அர்ச்சுனன் தபஸ்' என்ற பெயர் வந்ததற்குக் காரணம் என்னவென்றால் இந்த சித்திரத்தின் சற்றேறக்குறைய நடுமையத்தில் ஒருவன் ஆனந்தத்தால் கூத்தாட நாம் காண்போம். அவன்தான் அர்ச்சுனன். சிவபெருமானிடம் பாசுபதாஸ்திரம் வாங்க இவன் காட்டிற்கு வந்தான்; இவன் தவத்தில் உட்காரும்போது அந்தக் காட்டிலிருந்த எலி, புலி, காக்கை, கௌதாரி, யானை, கரடி, பூனை, பாம்பு முதலான எல்லா ஜந்துக்களும் இவனுடன் தவத்திற்கு வந்துட்கார்ந்தனவாம். அங்கிருக்கும் பிம்பங்களின் அருத்தம் இதுவே. இவன் தவம் பலித்து, ஈசுவரன் கையில் சூலாயுதம் ஏந்தினவரா யிவன் கண்ணிற்குப்பிரசந்நராகவே, இவன் ஆனந்தக் களிப்பால் தாண்டவமாடினான். அருச்சுனனுக்குப் பக்கத்தில் சூலபாணியாகிய ஈசுவரனை இந்த சித்திரவேலையில் நாம் காணலாம். இந்தத் தபசியாகிய அர்ச்சுனன் அநேக நாளாய் பட்டினி கிடந்து தோலொட்டி எலும்பு தோன்றியிருப்பதையும் அப்படியே நாம் காணலாம். அதல்லவோ சிற்பம். இந்த அற்புத சிற்பத்தைப் பாராக் கண்கள் வீண்கண்கள்.

இதற்குச் சமீபத்தில் கிருஷ்ணமண்டபம் என்றொரு மண்டபமிருக்கிறது. இதுவும் ஒரே கல்லில் கொத்தியிருக்கப்பட்டவேலை. இதில் 100-பதுமைகள் மாடும் மனிதனுமாகக் கொத்தப்பட்டிருக்கின்றன. வெகு விசித்திரவேலை. கிருஷ்ணபிரானுடைய கோகுலவாஸம் இதில் பொளியப்பட்டிருக்கிறது. புல்லாங்குழலூதிக் கொண்டு கண்ணன் நிற்க, அவனைச்சுற்றி 50-மாடுகள் மதத்துடன் நிற்பதையும், சிலர் மாடு கறப்பதையும், இடைச்சிகள் தயிர்க் கூடையைத்தலையிற் சுமந்துபோவதையும், குழந்தைகள் இடுப்பிலும் தோளிலும் தொத்திக் கொண்டிருப்பதையும், சிலகிழங்கள் தடியை ஊன்றி நடப்பதையும், சில சிறுபெண்கள் உல்லாசமாய் சிரித்துக்கொண்டுபோவதையும், பிள்ளைகள் விளையாடுவதையும், கன்றுக்குட்டிகள் துள்ளுவதையும், தாய்மடியில் ஊட்டுவதையும் இந்தக் கிருஷ்ண மண்டபத்தில் காணலாம். இவ்வளவு வேலையும் ஒரே கல்லில்.

அங்கிருந்து கொஞ்சதூரம் மலை ஏறிச் சென்றால், 'சேஷசாயிக் குகை' என்ற ஒரு குகைக்கு நாம் வருவோம். இதுவும் ஒரே கல்லில் செய்யப்பட்டிருக்கும்வேலை. இதில் பிரதானமாய் நடுவில் ஒரு சிவன்கோயிலிருக்கிறது. பார்வதியுடன் பரமசிவன் ஒரு ரிஷபத்தின் மேல் தன் காலைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்க நாம் காண்போம். இடது பக்கத்தில் ஆதிசேஷன்மேல் பெருமாள் பள்ளிகொண்டிருக்கிறார். இந்தக் குகையின் வலது பக்கத்தில் மகிஷாசுரவதம் காட்டப்பட்டிருக்கிறது. இந்த சித்திரவேலைதான் வெகு எடுப்பாய் எடுத்துக்காட்டப்பட்டிருக்கிறது. பார்வதியம்மை தனது வாகனமாகிய சிங்கத்தின் முதுகிலேறிக்கொண்டு தனது பரிவாரங்களுடன் மகிஷாசுரனை எதிர்ப்பதையும் அவனும் தனது பரிவாரங்களுடன் கதையால் அம்மனை அடிக்க வருவதையும் ஒரு யுத்தகளத்தில் இரண்டு சத்துருக்கள் எதிர்த்து நிற்பதை எவ்வளவு பயத்துடன் நாம் பார்ப்போமோ அப்படிப்பார்க்கலாம்.

வராகக்குகை.—இதுவும் மற்றவைகளைப் போல ஒரேகல்லில் செய்யப்பட்ட விசித்திர வேலை. அநேக பிம்பங்களிதிலடங்கியிருக்கின்றன. விஷ்ணுவராகாவதாரஞ்செய்து பூமாதேவியை ரக்ஷித்ததையும், அப்புறம் வாமனாவதாரஞ்செய்து ஆகாயத்தை அளந்ததையும் லட்சுமி அம்மை கொலுவிருப்பதையும், அதே லட்சுமி அம்மையை கஜங்கள் தண்ணீர்க்குடங்களால் ஸ்நானஞ்செய்துவைப்பதையும் காணலாம்.

இம்மாதிரி அநேக குகைகள் இருக்கின்றன, இவற்றுள் முக்கியமானவைகளைப்பற்றி வரைந்தோம். இன்னுமநேக குகைகள் பாதி வேலையாரம்பித்து வேலைமுடியாமற் சிலவும், வேலை கொஞ்சங்கூட துவக்காமல் சிலவும் கொத்துங் குறையுமாகவிருக்க நாம் பார்க்கலாம். எல்லாம் அழகாகவேயிருக்கும். இனி குகைகளை விட்டு கோவில்களுக்குப் போவோம்.

கடற்கரையோரமிருக்கும் கற்கோவில் அதியற்புதமானவேலை. கோவிலென்றால் நாம் பெரும்பாலும் பார்த்திருப்பதுபோல செங்கற் சுண்ணும்பு கட்டடமாக எண்ணவேண்டாம். அடிமுதல் நுனிவரையில் ஒரேகல்லில் செய்யப்பட்டிருக்கிற வேலை. இம்மாதிரி அருகாமையில் இரண்டு கோவில்களிருக்கின்றன. ஒன்று சிவனுக்கும் மற்றொன்று விஷ்ணுவுக்கும் கட்டப்பட்டவைகள். ஒவ்வொன்றிற்கும் கூர்ச்சாய் முடியுங் கோபுரங்கள் இருக்கின்றன. இவைகளில் ஒன்று பெரிய கோபுரம் மற்றொன்று சிறியது. பெரிய கோபுரத்தின் உயரம் 60—65 அடி. இது முழுமையும் ஒரேகல்லால் கட்டப்பட்டிருக்கிறது. இந்த சிற்ப வேலையை ஒருநாள்முடியப் பார்த்திருந்தபோதிலும் கண்ணின் அவா தீராது. ஐயோ காலத்தின் கொடுமை, இப்பொழுது சமுத்திரம் கரையோரம் நெருங்கிவிடவே இந்தக்கோவிலில் அலைகள் மோதுகின்றன. அநேக அற்புத வேலைகள் அழிந்து போயின. என்னமாயிருந்தாலும் அழகு மட்டில் குறையவேயில்லை. இந்தக் கோவிலைச்சுற்றி 14—15 அடி உயரம் பிராகாரமுண்டு. இக்காலத்தில் வெளிக்கோபுரம் பெரியதாகவும் உள்கோபுரம் கர்பகிருகத்தின்மேல் சிறியதாகவும் கட்டுவது வழக்கம். அப்படியல்ல பழையவேலைக்காரர்களுடைய கோட்பாடு. கர்பகிருகத்தின் கோபுரந் தான் உந்நதமாயும் அழகாயுங் கட்டுவது வழக்கம். அந்தவழக்கத்தை மாமல்லபுரத்திலும் தஞ்சாவூர் பிரகதீச்வரஸ்வாமி கோவிலிலுந்தான் காணலாம். இந்த கடற்கரையோரமுள்ள கோவில்களில் லிங்கம், பார்வதி பரமசிவன், இன்னும் மற்ற சில பிரதிமைகள், ஜலசாயியாயிருக்கும் விஷ்ணு, இவைகளைக் காணலாம். அலைகளால் மோதப்பட்டு உவர் நீரில் முழுகியிருக்கிற இந்தக் கோவில் கொஞ்சங் கொஞ்சமாகச் சேதப்பட்டுக்கொண்டு வருகின்றது.

ரதங்கள்.—ஊருக்கு 1-மயில் தூரம் தெற்கில் கடற்கரை ஓரமாக 5-ரதங்களிருக்கின்றன. ரதங்கள் என்றால் ரதங்கள்போல் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு பிரகாசித்துவரும் கோவிற்கள். ஒவ்வொன்றும் தனித்தனிக் கல்லில் குடையப்பட்டு அற்புதமாய் விளங்கிவருகிறது. இவைகளிலொன்று கொஞ்சம் மேற்கே ஒதுங்கி நிற்கிறது. இதின் ஆகிருதி கஜபிருஷ்டாகிருதி என்று ஜனங்கள் *வாஸ்து போத சாஸ்திரப் பிரகாரம் சொல்லுவார்கள். கஜபிருஷ்டம் என்றால் யானையின் பின்பக்கம். அதைப் போன்ற உருவம், அதாவது கோவிலின் ஒருபக்கம் குதிரை லாடம்போல் வளைந்திருக்கும். இந்த ரதத்தின் நீளம் 18-அடி; அகலம் 11-அடி; உயரம் 16-அடி; இந்த ரதம் முற்றும் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு அநேக பதுமைகளுடன் விளங்குகிறது. சாஸனங்கள் வெகுவாய் இருக்கின்றன. இந்த ரதத்திற்கு தர்மராஜ ரதம் என்று பெயர் கூறுவார்கள். இதையும் மற்ற ரதங்களையும் 'அத்யந்தகாமன்' என்ற பல்லவன் கட்டிவைத்தான். அவனது காலம் முதலியவைகளைப்பற்றிப் பின்பு விசாரிப்போம். இந்த ரதத்தில் அவன் பிருதுகள் அநேகம் எழுதப்பட்டிருக்கின்றன. அவைகளில் முக்கியமானவைகள், புவனபாஜனன்—இந்த லோகத்திற்கு உடையவன்; த்ரைலோக்ய வர்த்தனன்—மூன்றுலோகங்

* வாஸ்துபோதம் என்பது ஹிந்து சிற்பசாஸ்திர நூல்களில் 32-ல் ஒன்று.

களுக்கும் க்ஷேமத்தைக் கொடுக்கப்பட்டவன்; அத்யந்தகாமன்—அளவற்ற ஆசையுள்ளவன்; அமேய மாயன்—அளவிட முடியாத தந்திரி; இவைகள் போன்றவைகள். இந்த ரதத்திற்கே 'அத்யந்தகாமபல்லவேச்வரகிருகம்' என்கிற பெயர் சாசனத்தில் வரையப்பட்டிருக்கிறது. அதாவது இந்தப் பெயருள்ள பல்லவன் சிவனுக்காகக் கட்டிவைத்தகோவில் என்பது அருத்தமாகும்.

மற்ற 4-ரதங்கள் இதற்கு அருகாமையிலிருக்கின்றன. இந்த 4-கோவில்களுக்கும் அர்ச்சுனன் ரதம், பீமன் ரதம், நகுலன் ரதம், சகாதேவன் ரதம் என்று ஜனங்கள் சொல்வார்கள். இவைகள் தர்மராஜன் ரதம்போல அந்தமுள்ளவைகள். அழகாய்த் தோன்றும். ஒவ்வொரு ரதமும் ஒரேகல்லில் துடைத்துவிட்டாற்போல் செதுக்கிவிடப்பட்டிருக்கிறது. இந்த 5-ரதங்கள் மத்தியில் வழக்கப்படி ஒரே கல்லில் ஒரு பெரிய சிங்கமும் யானையும் வெட்டப்பட்டிருக்கின்றன. சிங்கம் 9-அடி உயரம்; அதற்குத் தகுந்த காத்திரம். யானையோ 14-அடி நீளம், 12 அடி உயரம். யானைமட்டில் கொஞ்சம் குறைந்த வேலையிலேயே விட்டுவிடப்பட்டதாகவும் முற்றிலும் முடியவில்லை என்றும் தோற்றுகிறது. இந்த ரதங்களுக்குக் கிழ்ப்பக்கத்தில் ஒரு அழகான நந்தியுமிருக்கிறது. இந்த ரதங்களில் சில சரிவர செதுக்கப்பட்டு முடிவு பெறுமல் அரைகுறையாக விடப்பட்டிருக்கின்றன. அதுவும் ஒரு அழகாகவேயிருக்கிறது. ஐயோ காலத்தின் கொடுமை, சில இடங்களில் இடிவிழுந்து ஒரு ரதம் நடுவில் இரண்டாக பிரிவுபட்டிருக்கிறது. இவைகளின் கோபுரங்கள் பருப்புத் தேங்காய் (Pyramid) போல முடியும். ஒரே கல்லில் ஒன்றின்மேலொன்ருக அநேக அடுக்குகள் குடைந்து மேற்புரம் சிங்காரமாகச் செதுக்கப்பட்டிருக்கிறபடியால் மனதைக் கவரும். இந்த ரதங்களை மாமல்லபுரத்திலிருக்கும் பழைய கல்வேலையாக நாம் போகப் போகக் காட்டுவோம்.

இந்த ஊருக்கு 2-மைலில் தூரம் வடக்கில் 'சாளுவன் குப்பம்' அல்லது 'இடையன்புடல்' என்று 2 பெயர்கள் வழங்கிவரும் ஊரில் பல்லவ குகை ஒன்று இருக்கிறது. அதையும் மாமல்லபுரத்து சிற்பவேலையில் சேர்த்து வரைவது வழக்கம். இந்தக் குகைக்கு அருகாமையில் ஒருமண்டபமுண்டு. அதை கோவிலென்றும் சொல்லலாம். மாமல்லபுரத்து வேலையைப்போல இவ்விடத்திலும் சிற்பசாஸ்திரம் அதிக அந்தமாய் விளங்குகிறது. இவ்விடத்தில் அநேக சாஸனங்களும்உண்டு. இடையன் புடலி லிருக்கும் கோவிலில் ஒரு நேர்த்தியான லிங்கமிருக்கிறது.

இவ்வளவு தூரம் நாம் சிற்பத்தின் அழகையும் குகைகளையும்பற்றி எழுதிவந்தோம். மாமல்லபுரம் குன்றுகளுக்கு வடபக்கத்தில் அர்ச்சுனன் தபசுக்கு வடமேற்கில் 'கணேசன் குகை' என்று ஒரு குகை இருக்கிறது. இதுவும் மற்றக்குகைகளைப்போல அழகாயிருப்பதுடன் ஒரே கல்லில் கொஞ்சம் கோபுரம் முதலானவைகளும் செதுக்கப்பட்டதாயிருக்கிறது. சிறியதாயினும் வெகு அந்தம். இந்த கணேசகோவிலில் முக்கியமான ஒரு சிலா சாஸனமிருக்கிறது. அது பல்லவ கிருந்த எழுத்தில் எழுதப்பட்டிருக்கிறது. இந்த சாஸனத்தைப்பற்றியும் இந்த மாமல்லபுரம் உண்டான காலமிவைகளைப்பற்றியும் பல்லவ அரசர்களைப் பற்றியும் பின்விவரிப்போம்.

## THE AGE OF MAN, (AN OLD FABLE).

## மனிதனுடைய வயது.

(ஒரு ஹிந்துவினற் சொல்லப்பட்ட ஒரு பழைய கற்பனைக் கதை).

இந்த வுலகத்திலுள்ள ஜீவஜெந்துக்களைச் சுவாமியானவர் சிருஷ்டித்தவுடனே, கழுதையும், நாயும், குரங்கும், மனிதனும் ஒன்ருய்ச் சந்தித்துத் தனக்குத் தனக்குக் குறிக்கப்பட்டிருக்கிற வயதையும் வேலையையும் சுவாமியினிடத்தில் நேரில் கேட்டுத் தெரிந்துகொள்வது உசிதமென்று தீர்மானஞ் செய்துகொண்டார்கள். முதலில் யார் சுவாமிக்குச் சமீபமாய்ச் சென்று தன்னுடைய பிரார்த்தனையை விண்ணப்பஞ் செய்கிறதென்று கொஞ்சநேரஞ் சந்தேகித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கழுதை அதிக ஆத்திரத்துடனே தான் முதலிற் போவதாய்ச் சொல்லி, மற்றக் காரியங்களைக் கவனித்துக்கொண்டிருக்கையில் சுவாமியின் சன்னிதானத்தில் சென்று, தனக்கு நியமிக்கப்பட்டிருக்கின்ற வேலைகளைத் தனக்குச் சொல்லும்படி திடீரென்று கேட்டது. கழுதையின் படபடப்பினல் சுவாமி கோபங்கொண்டு அதற்குப் புத்தி கற்பிக்கப் பிரியமுடையவராய், அது தன்னுடைய முதுகில் மற்றவர்களுடைய மூட்டைகளைச் சுமந்து யாருக்காக இழிவும் கஷ்டமுமான வேலை செய்கிறதோ அவர்கள் ஏதாவது கொடுத்தால் அதைத் தின்றுகொண்டு ஜீவிக்கிறது தான் அதற்கு வேலை யென்று சொன்ஞர். தன்னுடைய விதியைக்கேட்டு மனங்கலங்கி தன்னுடைய ஆயுளுக்களவு சொல்லும்படிப் பிரார்த்தித்தது. "முப்பது வருஷம்" என்று சுவாமி சொன்ஞர். "கிருபாநிதியே, அடியேன் மேல் கிருபை கூர்ந்து என்னுடைய ஜீவகாலத்தைக் குறைத்தருளும். இரக்கமில்லாமல் மட்டுக்கு மிஞ்சிப்போடப்பட்ட சுமைகளைத் தாங்கி என் முதுகுவளைந்து ஓயாத நடையால் என்கால்கள் இரத்தம் ஒழுக நெடுங்காலமாகிய முப்பது வருஷங்களுக்கு இந்த விதமாய்க் கஷ்டப்பட என்னல் முடியாது. ஏனென்ருல் என்னுடைய வேலை யின்னதென்று தெரிந்தவுடனே மனிதர்களும் ஸ்திரீகளும் கொஞ்சநேரங்கூட என்னை வேலையன்றி சும்மா விருக்க விடமாட்டார்கள்" என்று கண்ணுங் கண்ணீருமாகக் கழுதை சொல்லிற்று. தயாநிதியாகிய சுவாமிக்கு கிருபை வந்து கழுதையின் வயதை 18 ஆக்கி அதைப் போகும்படி நியமனஞ் செய்தார்.

உடனே தன்னுடைய வயதையும் வேலையையுந் தெரிந்துகொள்ள நாய் போயிற்று. சுவாமி வேறு வேலையிலிருப்பதைப் பார்த்து தன்னுடைய கோறிக்கையை விண்ணப்பஞ் செய்ய அநுகூலமான சமயம் வருகிற வரை தானிருக்கிறது ஒருவருக்குந் தெரியாதபடி ஒரு மூலையில் நல்ல புத்தியுடனே ஒதுங்கியிருந்தது. இருந்த வேலையை முடித்து விட்டுச் சுவாமியானவர் சுற்றிப் பார்த்தவுடனே நாயானது அந்த நல்ல சமயத்தில் பயபக்தி வினயத்துடனே இரக்க முண்டாகும்படி தன் வாலை யாட்டிக்கொண்டு சிம்மாசனத்தண்டை போயிற்று. நாயினுடைய தாழ்மையான நடக்கையையும், நல்ல புத்தியையும், விசுவாசத்தையும் பார்த்து அதற்கு வேண்டியதென்னவென்று சுவாமி கேட்டார். தான் செய்யும்படி நியமிக்கப்பட்டிருக்கிற வேலைகளைத் தனக்குச் சொல்லும்படி தூரத்தில் மரியாதையுடன் நின்று தாழ்மையுடனும் பயத்துடனுங் கேட்டது. "யாராவது ஒரு மனிதனிடத்திற்குப் போய் என்னிடத்தில் நடந்துகொண்டதுபோல் அவனிடத்தில் நடந்துகொள். அவனுக்குப் பயந்து மரியாதையாய் நட. தாழ்மையாய் அவன் வீட்டைக் காத்துக்கொண்டிரு. அவனிஷ்டத்தோடு கொடுக்கிறதைச் சாப்பிட்டு அன்னமிடுகிறவனுக்கு உண்மையாயிரு. அவனுக்குத் தெரியாமல் அவன் வீட்டிலிருந்து ஒரு சாமானும் வெளியில் போகாமல் பார். யாராவது அப்படி யெடுத்துக்கொண்டு போக நீ கண்டால் குரைத்துக்

கடித்து அவன் பின்னாலேயே போயாவது வேறெந்த விதமாயாவது திருட்டுப்போன சொத்து எஜமானுக்கு வந்து சேரும்படி செய். இது உன்னுடைய வேலை, போய் வேலையைப் பார்'' என்று சுவாமி சொன்னார். இவ்விதமாக எவ்வளவு காலம் தன் எஜமானுக்குத் தானூழியஞ் செய்யவேணுமென்று கேட்க அதற்கு ஆயுள் காலம் 30 வருஷம் என்று சொல்லிவிட்டு "ஆனால் கழுதையானது 30 வருஷகாலம் தனக்கு ஜாஸ்தி காலமென்று சொல்லிக்கொண்டதினால் 18 வருஷமாகக் குறைத்தேன். நீ ஏதாவது கேட்டுக்கொள்ள வேண்டுமா'' என்று சுவாமி கேட்டார். "கருணைக் கடலே, என்னுடையதென்பது ஒன்றுமில்லாமல் ஒரு எஜமானுக்கு ஊழியஞ் செய்வதற்கு 18 வருஷமோ அதிக ஜாஸ்தியான காலம். இரவும் பகலும் காவல் காத்துக்கொண்டிருக்கிறது மிகவும் சங்கடமான வேலை. நான் திருடர்களைப் பார்த்துக் குரைக்க வேணும். அவர்களைக் கடிக்கவேணும். அவர்களைத் தொடர்ந்து ஓடி என்னுடைய எஜமான் சொத்தைக் கைப்பற்றிக்கொண்டு வரவேணும். நானிறந்து போகிறதற்கு அநேக வருஷங்களுக்கு முன்னேயே வேலைக்குபயோகமில்லாமல் கிழமாகப் போய்விடுவேன். மிகுந்த நற்குணமுள்ள மனிதன்கூட நான் வேலைசெய்யச் சக்தியோடிருக்கிறவரை எனக்கு இரைபோட்டுவிட்டு, அவன் வாசற்படியண்டை காத்துக்கிடப்பதைத் தவிர வேறே ஒரு வேலையுஞ்செய்ய முடியாத காலத்தில் பிரயோஜனமற்ற நாயென்று என்னை வெளியில் தள்ளிவிடுவான் ; ஆனதினால் என்னுடைய ஆயுள் காலமுடிவாகிறதற்கு முன் பட்டினியாய் அனேக வருஷங்களிருக்கும்படி நேரிடும். ஆகையால் மனமிரங்கி ஆயுள்காலத்தை யின்னுங் குறைக்கவேணும்'' என்று மனங்கலங்கி நாய்கேட்டுக்கொண்டது. இந்த மனுவைக்கேட்டு சுவாமி நாயின்வயதை 12 வருஷமாக்கினார்.

அதற்குப் பின்னாலேபோன குரங்கானது சுவாமி வேலையாயிருக்கிறதைப் பார்த்துச் சரியான சமயம் வருகிறவரை காத்துக்கொண்டிருக்கப் பிரியப்படாமல் சுவாமிக்கு முன்பாகவிருந்துகொண்டு தன்னை எப்படியாவது பார்க்கும்படி செய்யவேணுமென்கிற எண்ணத்துடனே சிரிப்பும் பரிகாசமுமுண்டாகக்கூடிய விதமாய், புருவத்தை நெறித்துக்கொண்டும், பல்லைக்காட்டிக்கொண்டும், கீச்சுகீச்சு என்று சப்தம் போட்டுக்கொண்டும், கைகால்களைக்காட்டி அபிநயஞ்செய்துகொண்டும் அங்கசேஷ்டைகள் செய்துகொண்டிருந்தது. சுவாமி குரங்கைப்பார்த்து இங்கே எதற்காக வந்தாயென்று கேட்டார், "எனக்குக் குறிக்கப்பட்டிருக்கிற வேலையைத் தெரிந்துகொண்டு போக வந்திருக்கிறேன்'' என்று குரங்கு சொல்லிற்று. "இவ்வளவு வேடிக்கையாக எல்லாரும் மெச்சும்படி நீ இப்பொழுது செய்தாயே இதுதான் உன்னுடைய வேலை, உலகத்திலேபோய் அங்கே சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற எல்லா ஜெந்துகளுக்கும் சந்தோஷமுண்டாகும்படி உன்னுடைய சேஷ்டைகளைச் செய்துகொண்டிரு. அவர்களுன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். ஆனால் அவர்களுக்கு வேடிக்கையாக நீ நடப்பதினால் அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய நல்ல வஸ்துகளை உனக்குக் கொடுப்பார்கள். அதை நன்றாய்த் தின்றுகொண்டு 30 வருஷம் ஜீவித்திரு. உனக்குமுன்னே வந்த கழுதையையும் நாயையும் போல வயதைக் குறைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளாதே. உனக்குத் திருப்திதானா,' என்று சுவாமி கேட்டார். "ஐயோ, இந்த ஸ்திதியில் 12 வருஷமிருக்க என்னால் முடியாது. நான் எங்கேயிருந்தாலும் என் சமீபமாய்ப்போகிற ஒவ்வொருவர் முன்பாகவும் என் கோரணியையும் சேஷ்டைகளையுந் திரும்பத்திரும்பச் செய்துகொண்டிருப்பது மிகவு மிழிவான நித்தியவேலை, அதிலும் பத்துப்பேரில் ஒருவரைத்தான் என் செய்கைகளினால் பிரியப்படும்படி செய்யலாம். என்னுடைய

சேஷ்டையைப் பார்த்துப் பிரியப்படாத அனேகர் என் மேலே கல்லெறிந்து அடித்துத் துன்பஞ்செய்வார்கள். என்னுடைய சேஷ்டைகளில் பிரியப்படுகிற சிலருங்கூட தங்களுடைய வஸ்துக்களில் நல்லவைகளை எனக்குக்கொடாமல் அதிகக் கேவலமானவைகளைக்கூட எனக்கு அவைகள் மிகவு முயர்த்தியான சாப்பாடென்கிற எண்ணத்துடன் கொடுப்பார்கள். ஆனதினால் என்னைச் சிருஷ்டித்த சுவாமியே என்னுடைய வயதை இன்னுங்குறைக்கவேண்டும்" என்று குரங்குகேட்டுக்கொண்டது. குரங்கினுடைய முகாந்தரங்களையெல்லாம் ஒப்புக்கொண்டு அதினுடைய வேண்டுகோளின்படி வயதை 10 ஆகக்குறைத்தார்.

பிற்பாடு மனிதன் எழுந்திருந்து சுவாமிக்கு முன்னே நின்று தான் செய்யவேண்டிய வேலையைப்பற்றித் தனக்குச் சொல்லும்படி பிரார்த்தித்தான். உலகத்தில்போய் நன்றாய்ப்படித்து கல்வியைப் பெற்றுக்கொள். கலியாணஞ் செய்து குழந்தைகளைப்பெறு. சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற மற்ற ஜெந்துக்களுக்கெல்லாம் அதிகாரியாகவிரு. பாழ்நிலத்தையெல்லாம் உழுது செழிப்பாக்கு. அன்புடனும் சந்தோஷத்துடனும் ஜீவித்திரு" என்று சுவாமி சொன்னார். என்னுடைய ஆயுளுக்கெல்லையென்ன. நியமியும்" என்று மனிதன் கேட்டான். "பூரணமான 30 வருஷம்" என்று சுவாமி சொன்னார். ஐயோ! எவ்வளவு அற்ப ஆயுள். இவ்வளவு இன்பத்தை அனுபவிக்க இவ்வளவு குறைந்தகாலமா. 7, 8–வயது வரை என்னைச் சூழ உலகத்திலிருக்கின்ற வஸ்துக்களைப்பற்றி ஒன்றுந் தெரியாமல் காலங்கழியும். 20 வயதுவரை உபயோகமான அறிவைப் பெறுவதில் காலம்போய்விடும். 30-வயதுவரை இவ்வளவு கஷ்டத்துடன் கற்ற கல்வியைக்கொண்டு பொருள் தேடுவதில் காலத்தை உபயோகிக்கவேண்டும். 30-வது வயதில் இப்படிச் சம்பாதித்த பொருளின் சுகத்தை அனுபவியாமல் விட்டுவிடவேணும். இது என்னுடைய கதியாகிறது. கல்யாணஞ் செய்து குழந்தைகளைப்பெறவும் வீட்டிலுள்ள சமுசாரவின்பங்களை அனுபவிக்கவும் முகத்துவேர்வை நிலத்தில் விழும்படி கஷ்டப்பட்டுச் சம்பாத்தியஞ் செய்த சொத்துகளை அனுபவிக்கவும் ஐயோ! காலம் எங்கேயிருக்கிறது. ஆனதினால் சுவாமி மனமிரங்கி இதற்கு ஜாஸ்தியான காலம் ஜீவித்திருக்கும்படி கிருபை செய்யும்" என்று திருப்தியில்லாத மனிதன் சொன்னான். "உனக்குக் கழுதையினுடைய வயது 18-ம் சேர்த்துக் கொடுக்கிறேன். நீ சந்தோஷமாய் போய் சுகமாக வாழ்ந்திரு" என்று சுவாமி புன்னகையுடன் சொன்னார். "சுவாமி அப்பொழுது 48 வயது தானே ஆயிற்று. எனக்கு அனுபவிக்கும்படி கொடுத்திருக்கிற செல்வத்திற்கு இது குறைந்த காலம்" என்று தனக்குக்கொடுப்பட்ட வயது அதிகக்குறைவென்று அதிர்ப்தியாக விருந்த மனிதன் சொன்னான். "ஆனால் நாயின் வயதுஞ் சேர்த்து கிழவயதாகிய 60 வயது வரை ஜீவித்திரு" என்று மனிதனுடைய பஞ்சரிப்பைச்* சகிக்கமாட்டாமல் சுவாமி சொன்னார். தனக்குக் கிடைத்த வரத்தினாலின்னும் திருப்தி பெறாமல் அந்த மனிதன் சுவாமியின் காலில் விழுந்து "இன்னும் ஜாஸ்திகாலம் ஜீவித்திருக்க அனுக்கிரகஞ்செய்யக்கூடாதா" என்று கெஞ்சிக் கேட்டான். சுவாமிக்கு அதிகக்கோபம் வந்து "குரங்கினுடைய வயதையுஞ் சேர்த்துக் கொடுத்திருக்கிறேன். இதற்கு ஜாஸ்தியாக உனக்கு வயது கொடுக்கமாட்டேன் போ! எவ்வளவு நன்றாய் ஜீவித்திருக்கலாமோ அப்படி உயிரோடே வாழ்ந்திரு" என்று சொல்லிவிட்டார். இதைக் கேட்டுக் கொண்டு, சுவாமியினிடத்திலிருந்து தனக்கு ஜீவகாலம் 70 வருஷம்பெற்றுக்கொண்டு வந்துவிட்டதாக மனிதன் தனக்குள்ளே குதூகலித்துக்கொண்டுபோய்விட்டான்.

ஐயோ! பேதையே சுவாமியினுடைய தீர்மானத்தை நீ தப்பாக அர்த்தஞ்செய்துகொண்டாய். கல்வியைத்தேடுவதிலும் பொருள் சம்

* பஞ்சப்பாட்டென் பாடிக்கெஞ்சல்.

பாதிப்பதிலும் உன்னுடைய முதல் 30 வருஷ மூஞ் சென்ற பிற்பாடு பொறுமையுள்ள வேலைக்காரனுகிய கழுதையாகிருய். உன்னுடைய சொந்தத் தேகசுகத்தைப்பற்றிக் கவனமன்னியில் உன் பெண்சாதிக்காகவும் பிள்ளைகளுக்காகவும் உன்னைச் சார்ந்திருக்கும் மற்றவர்களுக்காகவு முழைக்கிருய். இவ்விதமாக நெடுங்காலமாகிய 18 வருஷம் கஷ்டப்பட்டபிற்பாடு நாயின் வேலையை யெடுத்துக் கொள்ளுகிருய். அதாவது 12 வருஷத்துக்கு வீட்டு வாசலிலிருந்துகொண்டு வீட்டையும் அதிலிருக்கிற சொத்தையுங் காவலாகக் காத்துக்கொண்டு நீ பணஞ் சேர்த்து வைத்ததற்கு உன் விஷயத்தில் நன்றியறிவில்லாமல் மன எரிச்சலோடு உன் மனைவியும் பிள்ளைகளுங்கொடுக்கிற அற்பப் போஜனத்தைப் புசித்துக்கொண்டிருக்கிருய். 60-வயது சென்ற பிற்பாடு நீ குரங்காகிருய். உன்னைப்பார்த்து உன்னுடைய சொந்த ஜனங்களும் அயலார்களுஞ் சிரிக்கத்தக்கவனுகிருய். உன்னை மரியாதையுடன் நடத்தாமல் அவமதித்து அனுசரிக்கிருர்கள். உன் குழந்தைகளும், குழந்தைகளின் குழந்தைகளும் உன்னை உபயோகமற்ற ஜெந்துவாகபாவித்து அசட்டையாக நடத்துவதுடன் தங்களுக்கு வேண்டியிராத போஜனத்தை யுனக்குக் கொடுத்து உன்னுடைய கிழத்தனத்தின் கோரணையைப்பார்த்துச் சிரிப்பார்கள். இவ்விதமாக சுவாமியினிடத்தில் வருத்தப்பட்டு 30 வருஷத்தை 70 வருஷமாக்கின காலத்தில் நீ எண்ணின சுகங்கள் ஒன்றையும் அனுபவியாமல் 70 வயதுவரை ஜீவித்திருந்து இறந்துபோகிருய். ஐயோ! பேதையே! இதுதான் உனது கதி.

## A FEW HINTS ON DOMESTIC SANITATION.

## சுகாதார விதிகளைப்பற்றிய சில குறிப்புகள்.

"பானைசுசி சட்டிசுசி, பாங்கான தேஹம்சுசி"

அழுகின பதார்த்தங்களும் மலமூத்திரங்களும் துர்க்கந்தத்தை வீசும். துர்க்கந்தம் அளாவிய காற்றைப் பூரித்தாலும், அந்தக் காற்று உடம்பிலே பட்டாலும், மலமூத்திரங்களை மிதித்தாலும், மலமூத்திர பூமியிலே உண்டாகிய பதார்த்தங்களைப் புசித்தாலும், மலமூத்திர அழுக்குச் சேர்ந்த ஜலத்தை உபயோகித்தாலும், பலவித நோய்கள் உண்டாகி, மனிதருக்குச் சடிதியிலே மரணத்தை விளைவிக்கும். ஆதலினுலே, மனிதர் சஞ்சரிக்கும் இடமெல்லாம் சுசியுடையதாய் இருக்கும்படி பாதுகாத்தல் பெருந் தருமம்.

வீட்டுக்குச் சமீபத்திலே மலமூத்திரங்களை விடுதலும், எச்சிலிலைகளையும் குப்பைகளையும் போடலும், எச்சிலுமிழ்தலும், கை கால் கழுவலும் ஆகாவாம்.

வீட்டைச் சேர்ந்த கொல்லையெங்கும் மலமூத்திரங்களினுலும், எச்சிலினுலும், குப்பையினுலும் அசுசி அடையாவண்ணம், அந்தக் கொல்லையிலே, வீட்டுக்குத் தூரத்திலே, மலகூடமும், எச்சிலிலைக் குழியும், குப்பைக்குழியும் அமைப்பித்தல் வேண்டும்; இப்படிச் செய்தால், கொல்லையும் வீடும் அசுசியடையாமல், சுசியுடையவைகளாயே இருக்கும்.

வீட்டுக்குச் சமீபத்திலே சிறு குழிகள் உண்டானுல் அவைகளைத் தூர்த்துப் போடல் வேண்டும். அப்படிச் செய்யா தொழிந்தால், அவைகளிற சென்ற தண்ணீர் அங்கே தங்கிச் சேருகித் துர்க்கந்தத்தை வீசும்; அந்தச் சேற்றிலே புழு முதலிய ஜெந்துக்கள் உண்டாகும். அந்தத் துர்க்கந்தத்தினுலே சுர முதலிய வியாதிகள் வரும்.

கொல்லையில் உதிர்ந்த இலைகளையும் சருகுகளையும் நாடோறும் பெருக்கி, குப்பைக் குழியிலே கொட்டல்வேண்டும். கொல்லையிலே முளைத்த பயன்படாத செடிகளெல்லாவற்றையும் காலந்தோறுங் களைந்து, குப்பையுடனே போடல்வேண்டும். இப்படிச் சேர்க்கிற திரளான குப்பை பயிர்களுக்கு நல்ல எருவாகுமே.

யாவரும் தங்கள் தங்கள் வீட்டுக்கொல்லைகளிலே உபயோகமாகும் பயிர்களையும், சிறந்த மரங்களையும், அழகிய புஷ்பச்செடிகளையும் வைத்து, அந்தக்கொல்லைகளை மிகச் சிறப்பித்தல் வேண்டும்: இத்தன்மையுடைய கொல்லைகளிலே உண்டாகும் நல்ல காற்று ஆரோக்கியத்தை விளைவிக்கும். பனைமரங்களையும் தென்னமரங்களையும் வீட்டுக்குச் சமீபத்தில் வைக்கலாகாது.

கிணற்றினுள்ளே இலைகள் உதிர்ந்து அழுகினாலும், சூரியகிரணம் படாதொழிந்தாலும், ஜலங் கெட்டுப்போம்: ஆதலினாலே, கிணற்றுக்குச் சமீபத்திலே பெருமரங்களை வைக்கலாகாது. பழஞ்சலமும், தூர் அதிகமாக உள்ள ஜலமும், வியாதியை உண்டாக்கும்: ஆதலினாலே கிணற்று ஜலத்தைக் காலந்தோறும் முழுதும் இறைத்துத் தூர் வாரிச் சுத்திசெய்வித்தல்வேண்டும். இரண்டு மூன்று நாளுக்கொரு தரம் கிணற்று ஜலம் முழுவதையும் இறைப்பித்து வந்தால், கொல்லையிலுள்ள மரங்களுக்கும் செடிகளுக்கும் பயிர்களுக்கும் உபயோகப்படும்: அது மட்டோ, ஜலம் நன்றாயிருக்கும். புதிது புதிதாக ஊறும் ஜலம் நல்ல சுவையுடையதாயும், வியாதியை விளைக்காததாயும் இருக்கும்.

சுசியுடைமை சரீரத்துக்கு ஆரோக்கியத்தையும், மனசுக்குச் சௌக்கியத்தையும் கொடுக்கும். இவ்வுண்மை அவிவேகமுள்ள ஏழை ஜனங்களுக்குத் தெரியாது: ஆதலினாலே பக்கத்திலுள்ள விவேகிகள் இதை அவர்களுக்கு நன்றாகத் தெரியும்படி சொல்லல் வேண்டும்.

## CHILDREN'S PAGE.

### 300 Lives Saved By A Doll.

### சிறுவர்க்கான பக்கம்:

### ஓர் பொம்மையினால் முன்னூறு பெயர்கள் உயிர்தப்பியது.

அமெரிக்கா தேசத்தில் 'யூனைடெட்ஸ்டேட்ஸ்' என்னும் மாகாணத்தின் தென்பாகத்தில் ஒரு காட்டு ஜாதியார்கள் இருந்தார்கள். அவர்கள் வெகு மூர்க்கர்கள். வேலைசெய்து ஜீவனம் செய்வதென்பதே தெரியாது. அவர்களுக்கு பக்கத்திலிருப்பவர்களைக் கொள்ளையடித்துத்தான் வயிறு வளர்க்கவேண்டும். கொல்லுக் கொலைக்கு அஞ்சவேமாட்டார்கள். குழந்தைகளென்றும், ஸ்திரீ ஜாதியென்றும் கூடப்பார்ப்பது கிடையாது. அவர்களுள் ஒருவருக்காவது இங்கிலீஷ் தெரியாது. இவர்களை அடக்கி ஜனங்களைக் காப்பாற்றும் பொருட்டு சர்க்காரில் ஒரு சேனையை அனுப்பினார்கள். அச்சேனைத் தலைவருக்கு இவர்களை நாசம் செய்துவிடாமல் நயமாக நல்வழிக்குக் கொண்டுவரவேண்டுமென்று கருத்து இருந்தது. முன் ஸ்பானிஷ் ஜாதியார் இவர்களை மிகவும் வருத்தியிருந்தமையால் எல்லா வெள்ளைக்காரரும் தங்களுக்கு விரோதிகள்தான் என்ற எண்ணம் அவர்களுக்கிருப்பதாக அவருக்குத் தெரிந்திருந்தமையால், தாங்கள் அப்படியல்லவென்று அவர்களுக்குக் காண்பிக்கவேண்டுமென்பது அவர் எண்ணம்.

அவ்வாறே அவர் தன்னுடைய சைன்னியத்தை ஓசைப்படாமல் அவர்கள் இருப்பிடமாகிய மலையடிவாரத்தில் ஒரு கிராமத்தில் தங்கவைத்து சில வேவுகாரர்களை அனுப்பி அவர்களுடைய சமாசாரமெல்லாம் அறிந்துவரும்படி அனுப்பினார். அவர்கள் நாலுபக்கமும் செங்குத்தான மலையால் சூழப்பட்ட ஓர் இடத்தில் அச்சாதியார் குடியிருப்பென்றும், எல்லாருமாக மொத்தம் முன்னூறு பெயர்கள் இருந்ததாயும் அறிந்துவந்தார்கள். அவர்களை அங்கேபோய்ச் சண்டையிடமுடியாது. அவர்கள் செத்தாலொழிய யுத்தகளத்தைவிட்டு ஓடமாட்டார்கள். அப்பேர்க்கொ

த்த தீரர்களாகையால் சேனைத்தலைவர் தக்க சமயம் வரட்டுமென்று காத்திருந்தார்.

அப்படியே சில நாளைக்கெல்லாம் அவர்களுள் சிலர் மலைபடிவாரத்திற்கு வந்து மூன்று பிரிவாகத் தங்கினார்கள். சிபாய்களெல்லாம் இதுதான் சமயம், நாம் எல்லாரும் ஒரு அடியாய் அவர்கள்பேரில் விழுந்து நாசம்செய்துவிடவேண்டுமென்றார்கள். ஆனால் தலைவீரருக்கு மாத்திரம் அப்படி எண்ணமில்லை. நன்றாய் வழிதெரிந்த சிலருடன் சில சேனைவீரர்களை அனுப்பி அவர்களைச் சிறைசெய்து வரும்படி சொன்னார். அவர்களும்போய் மரங்களின் மறைவில் பதுங்கிக்கிடந்து, இரவில் யாவரும் தூங்கவிட்டு அவர்கள்பேரில் விழுந்து, அவர்களுள் தலைவர்களைத் தூங்குகையில் குண்டுக்கட்டாய்க் கட்டி எல்லாரையுமாக வெகு வேகமான குதிரைகளில் வைத்துக் கொண்டுவந்து சேர்த்தார்கள். மூன்று ஜாகையிலும் மூன்று சம்சாரம் தங்கியிருந்தது. ஒருவராவது தப்பிப்போய் மற்றவர்களுக்குச் சமாச்சாரம் தெரிவிக்கவில்லை. இவர்கள் எல்லாருமாக வந்து சேரும்போது இராத்திரி இரண்டுமணி. உடனே தலைவீரரும் இவர்களும் பேசுவதற்காக இவர்கள் பாஷை தெரிந்த சிலருடன் வந்து சேர்ந்தார்.

இவர்கள் உட்கார்ந்திருந்ததைப் பார்க்க வெகு வேடிக்கையாயிருந்தது.

புருஷர்கள் உடம்பெல்லாம் பச்சை குத்திக்கொண்டிருந்தார்கள். தலையில் ஒரு கம்பிளியைச் சுற்றியிருந்தது. அதில் சிலசிறகுகளைச் சொருகி வைத்துக்கொண்டு வாயைத்திறப்பேனாபாரென்று கையைக்கொண்டு முழந்தாளைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுடைய பெண்சாதிகள் அவர்கள் காலின்கீழில் மூச்சு விடாமல் உட்கார்ந்திருந்தார்கள். * குழந்தைகள் மாத்திரம் நடந்த சங்கதிகள் என்னவென்று அறியாதவைகளாய் விளையாடிக்கொண்டிருந்தன. எல்லாரும் உடனே மரணம் சம்பவிக்குமென்று காத்திருந்தார்கள். அவர்களுக்கு பயமென்பதே தெரியாதாகையால் வெகு தைரியத்துடனிருந்தார்கள்.

இவ்விதமாக இரண்டு நாள் முழுமையும் கேட்டகேள்விகள் ஒன்றுக்கும் பதில்சொல்லாமல் ஒரேபிடிவாதமாயிருந்தார்கள். சிபாய்களுக்கு இவர்களை என்னசெய்வதென்றுதோன்றவில்லை. படைத்தலைவர் தன்னுடைய கீழ் அதிகாரி யொருவருடன் சிறைச்சாலைக்குட்புகுந்து அங்கிருந்த குழந்தைகளில் ஒன்றைக்கையில் தூக்கிக்கொண்டார். மற்றொருவரும் மற்றொன்றை எடுத்துக்கொண்டார். குழந்தைகள் கதறின. அவர்களுக்கெல்லாம் மனம் பதபதைத்தது. அப்பொழுதும் அவர்கள் வாயைத்திறக்கவேயில்லை. படைத்தலைவர் குழந்தைகளை தன்னுடைய கூடாரத்திற்குக்கொண்டுபோய் தன்னுடைய மடியில் உட்காரவைத்துக்கொண்டு தன்னாலியன்ற மட்டும் சமாதானம் செய்து பார்த்தார். அவராவது போகிறது பிள்ளைகுட்டிக்காரர் எப்படியோ சமாளித்தார். கீழ் அதிகாரி ஒருவர் இருந்தாரே அவருக்கு குழந்தைகள் கிடையாது. அதுகள் கதறுவதையும், கடிக்கிறதையும், உதைக்கிறதையும், நகத்தைக்கொண்டு பிராண்டுவதையும் பொறுக்கமாட்டாமல் வெகு சிரமப்பட்டார். இருந்தாலும்குழந்தைகளுக்கு ஒரு தீங்கும் செய்யாமல், அவர்களை ஓடவிடாமல் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டிருந்தார். படைத்தலைவர் சர்க்கரை, கற்கண்டு என்ன என்னவோ கொடுத்துப் பார்த்தார். ஒன்றும் சாயவில்லை. குழந்தைகள் ஒன்றின் பின் ஒன்றாய் அயர்ந்துபோய்த் தூங்க ஆரம்பித்தன.

படைத்தலைவர் குழந்தைகளைத் தன் படுக்கையிலேயே தூங்கவிட்டு நன்றாக மூடிவைத்துவிட்டு தன்னுடையவேலைக்காரனை குழந்தைகள் உள்ள வீடொன்றுக்கு அனுப்பி,—எ

* எதிரிப்படை இவ்வளவு சமீபத்திலிருப்பது அறியாதவர்களாகையால் தங்களுடைய பெண்டு பிள்ளைகளையும் கூடக்கொண்டு வந்திருந்தார்கள்.

ன்ன வாங்கிக்கொண்டுவரச்சொன்னார்? ஒரு பொம்மை. குழந்தைகளெல்லாம் எந்தச்சீமையிலும் ஒரேமாதிரிதான். பொம்மையைக்கண்டால் விளையாட ஆரம்பித்துவிடுமென்று அவருக்குத்தெரியும், பொம்மையைக்கொண்டுவந்து குழந்தைகள் தூங்குகிற படுக்கையிலேயே அவைகள் கண்ணைவிழித்துப் பார்த்தவுடனே கண்ணிற் படக்கூடிய இடத்தில்வைத்துவிட்டு அவர் கூடாரத்தில் ஒரு மூலையில் மறைவாய் நின்று பார்த்துக் கொண்டிருந்தார். பொம்மை வெகு நேர்த்தியாக இருந்தது. கண்டிவைத்தபாவாடையும் ரவிக்கைமேலாக்கோடு கையில் ஒரு குழந்தையை எடுத்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தது. மரப்பாச்சியென்றால் பெட்டைக்குட்டிகளுக்கு என்ன உற்சாகமுண்டாகிறது. இதுகளும் பெட்டைகள்தான். பொம்மை யென்பதே இன்னவென்று அதுகளுக்குத் தெரியாது. பார்த்ததேயில்லை. ஆகையால் கண்ணைத் திறந்து பார்த்துபொம்மையைக் கண்டதும் அதுக்கு அதிக ஆச்சரியமுண்டாகி அதை உற்றுப்பார்த்து இடுப்பில் எடுத்துக்கொண்டு வெகு உற்சாகத்துடன் கூடத் தூங்கிக்கொண்டிருந்த தன் தங்கையைத் தட்டி எழுப்பிக் காண்பித்து இரண்டும் கையைக்கொட்டிக் கொண்டு குதூஹலத்துடன் கூத்தாட ஆரம்பித்தன. இந்த உற்சாகத்தில் குழந்தகளுக்கு தாங்கள் எங்கிருக்கிறார்களென்பது மறந்துபோய்விட்டது. இவைகள் இப்படி விளையாடிக்கொண்டிருக்கையில் படைத்தலைவர் கற்கண்டு சர்க்கரையெல்லாம் கொண்டுவந்து மெதுவாகப்பக்கத்தில்வைத்தார். இப்பொழுது குழந்தைகள் நல்ல பசியாயிருந்தபடியால் அவைகளைத்தின்றன. உடனே அவர் சிறைச்சாலைக்குச் சொல்லியனுப்பி குழைந்தைகளின் தாயாரைக் கொண்டுவரச்சொன்னார். அவள் வந்ததும் போய்விட்டது என்று தான் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த குழந்தைகள் பொம்மை வைத்துக்கொண்டு வெகுசந்தோஷமாய் விளையாடிக்கொண்டிருப்பதையும் படைத்தலைவர் பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு கற்கண்டு கொடுத்துக்கொண்டிருப்பதையும், கிழதிகாரி குழந்தைகளுக்குக் காகிதத்தினால் குதிரைகள் கத்திரித்துக்கொடுத்துக் கொண்டிருப்பதையும் கண்டு தான் காண்பதெல்லாம் மெய்யோ பொய்யோ என்று தோன்றாமல் பிரமித்துக் கொண்டு நின்றாள். குழந்தைகள் உயிரோடிருப்பதைக் கண்டதும் அவள் ஹோ! என்று கதறிக்கொண்டு ஆனந்தபாஷ்பம் பொழிவதைப் பார்த்ததும் படைத்தலைவருக்கு நம்முடைய காரியம் ஜயித்ததென்று நன்றாய்த்தெரியும். குழந்தைகள் சந்தோஷமாயிருப்பதைப் பார்த்துத் தாயாருக்கும் சந்தோஷம் வருவதைப் பார்த்து அவர் இனிமேல் நம்முடன் சிநேகமாய் வருவார்களென்று உறுதியாய் எண்ணி அவளைக் குழந்தைகளுடன் சிறைச்சாலையிலுள்ள மற்றவர்களிடம் போய் நடந்ததைச் சொல்லட்டுமென்று அனுப்பினார். அவர்களுக்கும் இந்த வெள்ளைக்காரர்கள் தங்களைக் கொல்லவந்தவர்களல்லவென்று தெரிந்தவுடன் இவர்களுடன் வந்து சகஜமாய்ப் பழக ஆரம்பித்தார்கள். கொஞ்ச நாளைக்குப் பின் இவர்களைத் தங்களுடைய மற்ற ஜனங்களுக்கும் தெரிவிக்கும்படி அனுப்பிவைத்தார், எல்லாம் சமாதானமாகவே முடிந்தது. இவ்வாறாக இந்தப் படைத்தலைவர் நன்மையினால் தீமையை விலக்கினார்.

வெள்ளைக்காரரும் அந்தக் காட்டு ஜாதியாரும் அதுமேலாக ஒருவருக்கொருவர் பகையொழித்து வெகு அந்நியோன்யமாயிருந்து காலங்கழித்து வந்ததெல்லாம் இந்த பொம்மை செய்த வேலையென்று அவர்கள் சொல்லிக் கொள்ளுவார்கள். அவர்களையும் மிருகங்களைப் போல சுட்டெறியவேண்டிய செலவில்லாமல் முடிந்தது இந்த பொம்மையின் வேலையே.'

## WAR NOTES.

### யுத்தசமாசாரக் குறிப்புகள்.

ஐரோப்பாவில் நடந்துவரும் பாரதப்போர் உக்கிரம் குறையாமல் நடத்தப்பட்டு வருகிறது. ஜெர்மானியர் நாலாபக்கத்திலும் எதிரிகளால் நெருக்கப்பட்டு வருகிறார்கள். இதுவரையில் அவர்கள் தங்கள் எல்லைக்கு வெளியிலே தானேசென்று இதரதேசங்களில் சண்டையை நடத்திவந்தாலும், இந்தச்சாதனம் என்றென்றைக்கும் நிலைத்திருக்குமென்று சொல்வதற்கில்லை. மேற்புரத்தில் பிரிடிஷ் சைனியங்களும் ப்ரெஞ்சு சைனியங்களும் பெல்ஜியம் சேனைகளோடு அவர்களை நெருக்கிக்கொண்டு வருகிறார்கள். அவர்கள் முற்றிலும் பின் வாங்காவிட்டாலும் இங்கும் அங்கும் முக்கியமான இடங்களைவிட்டுத் துறத்தப்பட்டு வருகிறார்களென்று பீல்ட் மார்ஷல் ஸர்ஜான் ப்ரெஞ்சு அவர்கள் அனுப்பியிருக்கும் ரிபோர்ட்டுகளால் தெரியவருகிறது. கிழ்ப்புறத்தில் ருஷியரை யெதிர்த்து ஜெர்மானியர் போலண்ட் தேசத்திற் படையெடுத்துச் சென்றவேகம் வரவரக் குறைந்து வருகின்றது. தெற்கே இத்தலி தேசத்தார் அவர்களைநெருக்கி வருகிறார்கள். பிரிடிஷ் கப்பற்படைகள் ஜெர்மன் கப்பல்களை சமுத்திரத்தில் தலை காட்டாதபடி செய்துவருகின்றன. ஜெர்மானியர் தண்ணீரில் மூழ்கியோடும் 'ஸப்மாரின்' படகுகளால் பிரிடிஷ் கப்பல்களையும் இதர கப்பல்களையும் அடிக்கடி உடைத்துத் தகர்த்துவருவது உண்மையாயினும் இது முடிவில் ஜயத்தைக் கொடுக்குமென்று தோன்றவில்லை, ஆகாய ரதங்களிலேறியும் சண்டைபோட்டு வருகிறார்கள்.

### யுத்தச்செலவு.

ஸெப்டம்பர்மாச மத்தியில் பார்லிமெண்டு சபை கூடியபின் முதல் மந்திரி மிஸ்டர் ஆஸ்குவித் அவர்கள் ஏழாவது முறை 25 கோடி பவுன் யுத்தச்செலவுக்கு வேண்டுமென்று பார்லிமெண்டு சபையாரைக்கேட்க அவர்கள் அத்தொகையைக் கடனாகவோ வரியாகவோ சேர்த்துச் செலவழிக்க அனுமதி கொடுத்திருக்கிறார்கள். சண்டை யாரம்பமுதல் இதுவரையில் பார்லிமெண்டு சபையார் செலவிடக் கொடுத்த பணத்தொகை மொத்தம் 126 கோடியே 20-லக்ஷம் பவுன் ஆகிறது. சென்ற ஏப்ரல்மீ முதற்கொண்டு சண்டைச் செலவுக்கு என்று பார்லிமெண்டு சபையார் கொடுத்த தொகை 90 கோடி பவுன் ஆகிறது.

### நித்தியப்படிச் செலவு.

ஏப்ரல்மீ 1௳ முதற்கொண்டு ஜுலைமீ 17௳ வரையிலுள்ள 108 நாட்களின் செலவு தினமானம் 29-லக்ஷம் பவுன். ஜுலைமீ 18௳ முதல் ஸெப்டம்பர்மீ 11௳ வரையிலுள்ள 56-நாளைக்கும் தினந்தோறும் 42-லக்ஷம் பவுன் செலவாகியிருக்கிறது. இதில் பட்டுவாடா செய்யப்படாத தொகைகளும் கொஞ்சம் சேர்ந்திருக்கின்றன. சராசரியில் யுத்தத்திற்காக பிரிடிஷ் கவர்ன்மெண்டாருக்குப் பிடிக்கும் தினப்படிச்செலவு தினமொன்றுக்கு 35-லக்ஷத்துக்குக் குறையாமலாகிறது. மிஸ்டர் ஆஸ்குவித் பேசிய பேச்சிலிருந்து யுத்தச் செலவு ஒருவாரத்துக்கு $3\frac{1}{2}$கோடி பவுன் சராசரியாகுமென்று தெரியவருகிறது. யுத்தத்துக்கு முன்னால் பிரிடிஷ் சைனியங்கள் முழுவதின் செலவு ஒருவருஷத்துக்கு $3\frac{1}{2}$கோடியாயிற்று.

### பிரிடிஷ் சைனியம்.

சண்டையாரம்பத்தில் ஒன்றரை லக்ஷம்பேர் கொண்டசைனியத்தைப் படையெடுப்புச் சேனையாக ப்ரான்ஸுக்கு அனுப்பினார்கள், இப்பொழுது பிரிடிஷ் சைனியத்தின் தொகை அதைவிட 20-மடங்கு அதிகமாயிருக்கிறது. யுத்தகளத்தில் நின்றும் யுத்தம்செய்யும் சைனியத்தொகை இவ்வளவென்று சொல்லா விட்டாலும் முன்னிலும் பதின்மடங்கு அதிகமான சைனியங்கள் அனுப்பப்பட்டிருக்கிறதாக மட்டும் தெரிவித்தார்.

### சேவைநிர்ப்பந்தம் (Conscription)

இந்தயுத்தம் தொடங்குமுன் ஜெர்மானிய

இராஜ்யபக்தியும் ப்ரான்ஸிலும் இராணுவசேவை செய்வது நிர்ப்பந்தமாக ஏற்பட்டிருந்தது. இப்பொழுதும் அத்தேசங்களில் இராணுவசேவை பலமுள்ள புருஷர்களுக்கெல்லாம் நிர்ப்பந்தமாகவேயிருந்து வருகிறது. பிரிடிஷ் தீவுகளில் மட்டும் நிர்ப்பந்த சேவையேற்பாடு ஊர்ஜிதத்தில் இல்லை. அப்படியிருந்தும் தன்னிச்சையாகச் சேர்ந்தவர்களைக் கொண்டு ஒரு மஹா பெரிய சைனியப்படை சேர்த்துவிட்டார்கள். சேர்த்திருந்தாலும் அது போதாதென்றும் 18-வயது முதல் 65-வயது வரையில் உள்ள புருஷர்களெல்லாரும் தேசபாதுகாப்பின்பொருட்டு அவரவர்களால் செய்யக்கூடிய வேலையைச்செய்ய நிர்ப்பந்தமான ஏற்பாடுசெய்ய வேண்டுமென்று சிலர் சொல்கிறார்கள். நிர்ப்பந்தசேவை ஸ்வதந்தரத்துக்கு ஒவ்வாததலால், அது கூடாது என்றும் தன்னிச்சையாகச் சேருகிறவர்கள் தொகை ஏராளமாயிருப்பதால் அதைக்கொண்டே யுத்தத்தை நடத்தலாமென்று சிலரும் அபப்பிராயப்படுகிறார்கள். இந்த விஷயம் பத்திரிகைகளில் பேசப்பட்டதிலிருந்து இப்பொழுது பார்லிமெண்டு சபையிலே ப்ரஸ்தாபத்துக்கு வந்திருக்கிறது. மந்திராலோசனை சைபையிலுள்ள மந்திரிகளிலும் இது விஷயமாய் இருகக்ஷி யேற்பட்டிருக்கிறதாகத்தெரிகிறது. ஒருசாரார் நிர்ப்பந்த சேவை அவசியமென்று சொல்ல இன்னொரு தரப்பார் அது கூடாது என்று அபிப்பிராயப்படுகிறார்களெனத் தெரியவருகிறது. இது எப்படித்தீர்மானிக்கப்பட்டாலும் சரி, இந்த மஹா யுத்தத்தை எப்படியும் ஜயகரமானமுடிவுக்குக் கொண்டுவர என்ன கஷ்ட நஷ்டங்கள் நேர்ந்தாலும் அதையெல்லாம் பொறுத்துக்கொண்டு போக ஜனங்கள் சித்தமாயிருக்கிறார்கள் என்பது ஒன்றுமட்டும் திண்ணமாய் விளங்குகிறது.

லார்ட் கிட்சனர் அபிப்பிராயம்.

யுத்தமந்திரியாகிய லார்ட்கிட்சனர் அவர்கள் இதுவரையில் நடந்தயுத்தத்தைப் பற்றிப் பேசியதில் ஜெர்மானியர் இன்னும் முறியடிக்கப்படவில்லையாயினும், அங்கங்கே அவர்கள் கைசோர்ந்து வருகிறார்களென்று தென்படுகிறதென்றும் கூட்டாளிகள்கை வரவர பலப்பட்டு வருகிறதென்றும், நமது கையை இன்னும் பலப்படுத்த நிர்ப்பந்தசேவை யேற்பாடு வேண்டுமா என்று யோஜிக்கப்பட்டு வருகிறதென்றும் சொன்னார். அவர் பேசியதிலிருந்தும், நமது அரசர் பிரதிநிதி லார்ட்ஹார்டிஞ்சவர்கள் சட்டநிருபண சபையில் பேசியதிலிருந்தும் ஜெர்மானியர் என்னதான் வலுத்தகையாகவிருந்தாலும் அவர்கள் முடிவில் கைசளைத்துத் தோல்வியடைவது நிச்சயமென்று யுத்த மர்மங்களின் உளவு தெரிந்தோர் அபிப்பிராயப்படுகிறார்களென்று தெரியவருகிறது.

பத்திரிகைகளின் பொறுப்பு.

சமாதானகாலத்தில் பத்திரிகைகள் என்னதான் தாராளமாகப் பேசினும் யுத்தகாலத்தில் அப்படிபேசுவது யுக்தமில்லை யென்று தானே படும். இதற்காகவே இராஜ்யப் பாதுகாப்புச் சட்டம் என்று புதிதாய் ஒரு சட்டம் செய்திருக்கிறார்கள். இச்சட்ட நிபந்தனைகளின்படி யுத்தகாலத்தில் பஹிரங்கமாகப் பேசக்கூடாத விஷயங்கள் என்று கவர்ன்மெண்டாருக்குத் தோன்றுவதைப்பற்றி அத்துமீறிப் பேசினதாகத் தோன்றும் பத்திரிகைகளை ஸர்க்கார் கோர்ட்டிலிழுத்துக் கண்டித்து வருகிறார்கள். நிர்ப்பந்தசேவை (Conscription) விஷயமாக அபிப்பிராயம் இரண்டுபட்டிருப்பதால் அனேக பத்திரிகைகள் இது சம்பந்தமாகப் பேசுவதில் சட்டவரம்பு கடந்து பேசியிருக்கலாமென்று தோன்றுகிறது. இந்தக் கேஸ்களெல்லாம் கோர்ட்டுகளில் அந்தரங்கமாகப் பைஸல்செய்யப்பட்டு வருவதால் அவற்றின் உண்மையறிவது கஷ்டமாயிருக்கிறது என்று ஒரு தரப்பார் பார்லிமெண்டு சபையில் இதை ப்ரஸ்தாபத்துக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள்.